


சமய பாட போதனைத் திங்களிதழ்



உலையிலிடு மெழுகதுபோல்
உருகிமனம் வெறுங்கூடாய்
உலர்ந்து வாடி
நிலைகுலைந்து மதிமயங்கி
நின்றுமிகப் பரதவித்தல்
நீதியோ சொல்
கலைமகளே! வடிவணங்கே
கமலமுகத் திருமாதே!
கருணையாளே!
மலைமகளே! அறந்தழைக்கும்
சொக்கர்பங்கில் மீனாட்சி
மதுரைத்தாயே!

—மீனாட்சியம்மை தோத்திரம்

திருவள்ளுவர் ஆண்டு 2006 புரட்டாசித் திங்கள். செப்டம்பர் 1975

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை - 600018.



நமது தலைவர்

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

அவர்களின்

# பொன்விழா

பேரன்புடையீர்,

நமது தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் தலைவரும், தற்காலத் தமிழகத்தின் சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்டவரும், தமிழினத் தலைவரும், தமிழ் மொழிக்காவலரும், ஒப்பற்ற குறள்வழிச் சிந்தனையாளரும், அருள் நெறித் தந்தையும் ஆகிய, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனகர்த்தர், திருவருள் திரு. தெய்வசிகாமணி அருணாசல தேசிக பராமாசாரிய சுவாமிகள் (தவத்திரு. குன்றக்குடி அடிகளார்) அவர்களின் பொன்விழா, 18-10-75 19-10-75 ஆகிய இரண்டு நாட்களிலும் திருச்சிராப்பள்ளியில் நடைபெற இருக்கிறது.

இப்பெரு !விழாவில் தருமபுர ஆதீனம் குருமகா சந்நிதானம் திருவருள் திரு. சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், பேரவையின் ஏனைய மாநிலக்குழு உறுப்பினர்களான மகா சந்நிதானங்களும், இந்தியத்துணைக் குடியரசுத்தலைவர் மாட்சிமிகு. பி. டி. ஜாட்டி அவர்களும், திருமதி மரகதம் சந்திரசேகர் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள்.

18-10-75ஆம் நாள் காலை இந்து தனியார் பள்ளித் தாளாளர் பேரவையின் சார்பில் கலைநிகழ்ச்சிகள் பட்டிமன்றம் முதலியனவும், மாலையில் மாபெரும் ஊர் வலமும், ஊர்வலத்தின் இறுதியில் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை நாற்றுக்கால் மண்டபத்தில் கொலுக்காட்சியும், பின்னர் நாடகமும் நடைபெறும்.

19-10-75ஆம் நாள் காலை, பள்ளிக்கல்வி இயக்குநர் திரு. இரா. பெருமாள் அவர்கள் தலைமையில், தாளாளர் பேரவை சார்பாக விளையாட்டு விழாவும் மாலையில் பொன்விழாவும், தவத்திரு அடிகளார் அவர்களின் 50ஆண்டுப் பணிகளையும் தொண்டுகளையும் விளக்கும் வகையில் தொகுக்கப்பெற்ற "பொன்விழா மலர்" வெளியீட்டு விழாவும் நடைபெறும்

அன்பர்கள் அனைவரும் தவறாது கலந்து கொண்டு சிறப்பிக்கும்படி வேண்டு கிறோம்.

இங்ஙனம்

செ. தம்புரான்
பொதுச்செயலாளர்

தவத்திரு. சாந்தலிங்க ராமசாமி அடிகளார்
தலைவர்

பொன்விழாக்குழு

அருளோசை

சமய பாட போதனைத்
திங்களிதழ்

இராக்கத புரட்டாசி
1975 செப்டம்பர்

மணி 4] [ஓசை 3



## இந்த இதழில்



## அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்

நவராத்திரி வருகிறது. இவ்விதழ் அட்டையைப் பராசக்தி ஒன்பது திருவுருத் தாங்கியிருக்கும் அருட்தோற்றம் அணி செய்கிறது. உள்ளே மகாகவி பாரதியார் எழுதிய நவராத்திரி பற்றிய குறிப்பும் வெளியிடப் பெற்றுள்ளது.

அடுத்து வரும் இதழ்களில் "கந்தபுராணம்" சித்திரக் கதை வெளியிடத் திட்டமிடப்பெற்றுள்ளது. அதற்கு முன்னேடியாக அடுத்த இதழில் கச்சியப்பரின் கந்த புராணம் அரங்கேறிய வரலாறு சித்திரக் கதையாக வருகிறது.

தவிர்க்க முடியாத சில காரணங்களால் இவ்விதழ் தாமதமாக வருகிறது. அடுத்து இது தவிர்க்கப்படும்.

நவராத்திரியை ஒட்டி, பேரவையின் வெளியீடாக அடக்க விலைப் பதிப்பாக அபிராமி அந்தாதி வெளியிடப் பெறுகிறது. வேண்டுவோர் பேரவைக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

பொ. ரெ. கோவிந்தராஜுலு, பி.எ., பி.காம்.,
பதிப்பாசிரியர்




உள்ளத்தைக் கவர்ந்தது...

'திருக்குறள் தேசிய நூல்' என்ற கட்டுரையின் துவக்கம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது.

சி. வி. சீதாராமன்,
தொளசம்பட்டி

ரசித்தேன்-சுவைத்தேன்...

ஸ்ரீலஸ்ரீ அடிகளார் திரும்பவும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றதை யொட்டி திரு. பழ. தரும. ஆறுமுகம் அவர்கள் எழுதிய பொருள் பொதிந்த கவிதையை ரசித்தேன்-சுவைத்தேன்

—லீலா ஆடல்வல்லான்
மதுரை.

கண்டேன்-களிப்புற்றேன்...

தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் மூன்று திருவுருவப்படத்துடன் வாழ்த்துப் பாடலும், பாலின் வெண்மைபோல் விளங்கும் தாளும், அடிகளாரின் கட்டுரைகளும் கண்டு இன்ப மிகுதியால் களிப்புற்றேன்.

புலவர். சி. சண்முகானந்தம்
கோபால சமுத்திரம்.

அருமை... அருமை...

புதிய வடிவில்-புதிய பொலிவில் வெளிவந்துள்ள 'அருளோசை' அருமை! அருமை! கட்டுரைகள் அனைத்தும் கருத்துப் பெட்டகங்கள்.

ஜி. நடராஜன்
ஏற்காடு

புதிய பகுதி......

சிறுவர்களுக்குப் பயன்படும் வகையில் சிறுவர்களுக்கான பகுதி ஒன்றை ஆரம்பிக்கலாமே!

—பி. வி. குமார்
சென்னை-17.

புதிய கோணம்...

புதிய கோணத்தில் புதிய கருத்துக்களைச் சொல்லும் அருளோசைக்கு என் வாழ்த்துக்கள்-பாராட்டுக்கள்! தோத்திரப்பாடல் பகுதி இனிக்கிறது.

—வி. கணேஷ்
சென்னை. 40.

என் விருப்பம்...

தமிழ்நாட்டின் திருமடங்கள் வரலாறும், திவ்வியப்பிரபந்தம், பிள்ளைத்தமிழ் வரிசை—இவைகளைப்பற்றித் தொடர்பகுதியும் வெளியிட ஆவன செய்வீர்கள் என நம்புகிறேன்.

ஷண்முகம்
இராமநாதபுரம்

புதுமையான முயற்சி...

எழுத்துப்பட்டிமன்றம் என்னும் புதுமையான முயற்சி மிக்க சுவையுடன் இருக்கிறது...

தி. கு. நவனீதம், திருச்சி-2

புதிய தோற்றம்...

"அருளோசை"யின் புதிய தோற்றம்... உள்ளம் கவர்வதாக இருந்தது.

க. இராமலிங்கம், தேங்காய்க்கடை
மலைவாசல், திருச்சி-2

அந்த நடை......!

"திருக்குறள் தேசியநூல்" கட்டுரை மிக நல்ல பீடிகையுடன் தொடங்குகிறது. அந்த நடை "அந்தமிழில் ஆற்றொழுக்காய்ச் சிதறல் இன்றி, அவர் எழுதும் நடை கண்டே அன்னம் நாணும்" என்ற கவிதையின் அடிகளுக்கு மிகப் பொருத்தம்.

பெ. சுப்பிரமணியம், எம்.ஏ,
எடமேலையூர்.

இன்னும் சுவையாக...

பேட்டிக் கட்டுரை இன்னும் சுவையாக எதிர்பார்க்கிறோம்.

செ. பழனிச்சாமி, கோவை-35.




## தேசீயத் தன்மையுடைய நூல்

உயர்ந்த ஒருமைப்பாட்டையளிக்கும் கருத்துக்கள் உலகில் எல்லா மொழிகளிலும் உண்டு. ஆயினும், வேற்றுமை என்பதை மறந்தும்கூடக் காட்டாது இனம், மொழி, சமயம் ஆகிய வேறுபாடுகளைக் கடந்து பொது நிலையில் தோன்றிய நூல் மக்களாகப் பிறந்தோர் பேசும் வேறு எம்மொழியிலும் இல்லை. தமிழில் உள்ள திருக்குறள்தான் அத்தகைய சிறப்புடைய நூல். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய திருவள்ளுவர் மனிதகுல ஒருமைப்பாட்டுக்குரிய மிகச் சிறந்த நூலை இயற்றித் தந்தார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மனிதகுலத்தில் நாட்டுச் சண்டைகள், மொழிச் சண்டைகள், இனச் சண்டைகள், சமயச் சண்டைகள் மலிந்திருந்த காலம். நாட்டுப்பற்றைப் பெரிதுபடுத்தி ஒருநாடு பிறிதொரு நாட்டோடு மோதி அழிப்பதை விரம் என்று பாராட்டிச் சண்டைகளில் வெற்றி பெறுவதற்காகக் கடவுளைக்கூடப் பிரார்த்தனை செய்தனர். அந்த மாதிரியான காலச் சூழ்நிலையில் திருக்குறள் தோன்றியது தமிழகத்தின் ஒருமைப்பாட்டுணர்வுக்கு எடுத்துக்காட்டு. தமிழகம் பழங்காலந்தொட்டே ஒருமையுணர்வைத் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்", "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்", "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்", "எல்லா உலகமும் ஆனய் நீயே", "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்ற சொற்றொடர்கள், காலத்திற்குக் காலம் தமிழகம் மனிதகுல ஒருமைப்பாட்டை வற்புறுத்தியமைக்கு எடுத்துக்காட்டுக்கள். இங்ஙனம் மிகச் சிறந்த ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள் தமிழகத்தில் தோன்றினலும், தமிழகத்தில் ஒருமைப்பாடு வளரவில்லையென்பது என்னவோ உண்மை. கார்லைல் என்ற அறிஞன், "ஒருநாட்டு மக்களை இணைக்கக்கூடிய ஆற்றல் மிக்க ஒரு தேசீய இலக்கியம் இருக்கவேண்டும்" என்று கூறுகின்ருன். பாரதம் விடுதலை பெற்றிருக்கிறது. பாரதம் விடுதலை பெறும்பொழுதே நாடும் துண்டாடப்பட்டுவிட்டது. இயற்கையாக இருந்த ஒருநாடு சமயத்தின் காரணமாகத் துண்டாடப்பட்டு விட்டது. இஃது என்றும் நீங்காத வேதனை. நாடு துண்டாடப்பட்டு விடுதலை பெற்ற பிறகும் எஞ்சியுள்ள நாட்டில் இன்னமும் உணர்வு பூர்வமான ஒருமைப்பாடு வளரவில்லை. திரும்பத் திரும்ப ஜாதி, இன, மொழிக் கலவரங்கள் தலைதூக்குகின்றன. இந்திய நாட்டு மக்களிடம் வலிமைமிக்க ஒருமைப்பாடு தோன்றினல்தான் இந்தியாவின் விடுதலைக்குப் பாதுகாப்பு. பல்வேறு வேற்றுமைகளுடைய மக்களை ஒருநாட்டு மக்களாக்கக் கூடிய ஆற்றல் எந்த இலக்கியத்திற்கு இருக்கிறது? பாரத நாட்டில் எல்லா மாநிலங்களிலும் பரவியுள்ள காதைகள் இராமாயணமும், மகாபாரதமுமாம். இந்திய மொழிகள் எல்லாவற்றிலுமே இந்தக் காதைகள் இருக்கின்றன. இந்தக் காதைகள் தோன்றிய காலத்தில் அவை மக்களிடத்திற் சில பண்பாடுகளைத் தோற்றுவித்தன. இன்றைக்கும்கூடச் சில இன்றியமையாத



சிறந்த மனித இயல்புகளைப் பெற இந்த நூல்கள் பயிற்சி துணை செய்யும்.

மகாபாரதம் வியாசமுனிவரால் செய்யப் பெற்றது. மூலம் வடமொழியிலுள்ள கதை. ஆனால், இந்திய மொழிகள் அனைத்திலும் பாரதம் உண்டு. தமிழில் பெருந்தேவனார் பாடிய பாரதமும், வில்லிப்புத்தூராழ்வார் பாரதமும், நல்லாப்பிள்ளை பாரதமும் என மூன்றுண்டு. பின்னால் பாரதி, பாரதத்தின் ஒரு பகுதியைப் "பாஞ்சாலி சபதம்" என்று பாடியுள்ளான். தமிழகக் கிராமங்கள் முழுதும் பாரதக் கதைக்குச் செல்வாக்கு உண்டு. சாதாரணமாகக் கிராமங்களில் பாரதக் கதையை ஆண்களும் பெண்களும் கூடி இரவு முழுதும் கேட்பர். பாரதம் படித்தால் மழை பொழியும் என்ற நம்பிக்கை இன்றும் நிலவுகிறது. ஒரு மொழியில் தோன்றிய காவியம் மொழியால். வாழ்க்கை முறையால் மாறுபட்ட பிறிதொரு இனத்தில் செல்வாக்குப் பெறுவதென்பது சிறப்புத்தான். அந்த வகையில் மகாபாரதம் சிறந்த காவியம் என்பதில் கருத்து வேறுபாடில்லை. ஆயினும் மகாபாரதம் ஒரு குடும்பத் தகராற்றில் பிறந்த காவியம்; சொத்துச் சண்டையில் பிறந்த காவியம். சொத்துக்களுக்காகப் பங்காளிகள் யுத்தம் செய்து கொள்ளும் கொடிய காட்சியைக் காவியத்தில் பார்க்க முடிகிறது. காவியத்தின் நாயகனே சூதாடுகின்றான். பெருமைப் படுத்தப்பட வேண்டிய பெண் இழிவுபடுத்தப் படும் அளவுக்கு வளர்ந்த சின்னத்தனம் காவியத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால், மகாபாரதக் காவியம் ஓரளவு வளர்ந்த-பக்குவப்பட்ட மக்களிடத்தில்தான் பயனைத்தர முடியும். அதோடு மகாபாரதம் தனிமனித ஒழுகலாற்றுச் சிறப்புக்களை எடுத்துக் கூறுவதிலேயே சிறப்புற்று விளங்குகிறது. ஒருமைப் பாட்டுக்கு மகாபாரதம் பயன்படுவது ஓரளவே.

இராமகாதை மிகச் சிறந்த காவியம். தமிழில் கம்பன் மிக அற்புதமாக அக்காவியத்தைப் படைத்திருக்கிறான். இனிய நெறிகளை இலக்கியச் சுவையுடன் படைப்பதில் கம்பன் வெற்றி பெற்றுள்ளான். இராமகாதையும் ஓர் அரச குடும்பத்தின் கதையே. மாற்றாந் தாயின் கொடுமையால் கதை வளர்கிறது. இராமகாதையிலும் அண்ணன் தம்பிகளில் யாருக்கு அரசுரிமை என்ற மோதுதலே. ஆனால், இராமன் உரிமையின் பெயரால் மோதாமல் தம்பிக்கு விட்டுக் கொடுத்து விட்டுக் காட்டுக்குப் போய் விடுகின்றான். இராமனின் பண்பாடு, தியாகம் மிகமிக உயர்ந்தது. மக்களாட்சி முறை நிலவும் நாட்டில் தேர்தல் வெற்றி, தோல்விகள் நெடிய காழ்ப்புக்கும் பகைக்கும் வித்திடுகிறது. இராமனின் பண்பு நாடு முழுதும் கால் கொள்ளுமானால் அமைதியான தேர்தல் அரசியலில் நடைபெறும். இராமகாதையில் ஒருமைப்பாட்டுக்குள்ள வித்துக்கள் உண்டு. அயோத்தியில் அரச குடும்பத்தில் பிறந்த இராமனுக்கு வானரகுலத்துச் சுக்கிரீவனும்; அரக்கர் குலத்து வீடணனும், வேடுவர் குலத்துக் குகனும் உடன்பிறந்தார்களாகின்றனர். இஃது இனங்களைக் கடந்த ஒருமைப் பாடுதானே! ஆயினும், நாடு, பெண் தொடர்பான சண்டைகள், அவ்வழிப்பட்ட கொலைகள் மலிந்த காவியம். ஆதலால், இராமகாதை ஒருமைப்பாட்டுக்கு நூற்றுக்குநூறு அளவில் துணை செய்ய இயலாது. இராமாயணம், பாரதம் என்ற-நாட்டளவில் பயிலப்படும் இவ்விரண்டு காதைகளே ஒருமைப்பாட்டை வளர்க்க இயலாதென்றால் அந்த இடத்தில் வேறு எந்த நூலை வைத்து எண்ணுவது?

ஒருமைப்பாட்டை வளர்க்கும் தேசியத் தன்மையுடைய நூல் வேற்றுமைகளை-சண்டைகளை விளக்காத நூலாக இருக்கவேண்டும். பொதுவான அறங்களைக் காட்டவேண்டும். எல்லா மொழிவழி இனத்திற்கும், அந்த நூல் கூறும் அறநெறி ஏற்புடையதாக இருக்க வேண்டும். எல்லோரும் படித்தற்கு எளிதாகவும் இருக்கவேண்டும். அது விதித்தன செய்ய வழிகாட்டும் நூலாகவும் இருக்க வேண்டும். செய்யத் தகாதனவற்றை விலக்க வழிகாட்ட வேண்டும். இந்த வகையில் மனித குலத்தை ஒருமைப்பாடுடையதாக-வளர்க்கத் தக்கதாக அமைந்துள்ள ஒரே நூல் திருக்குறளேயாம். (தொடரும்)

*சிந்தனை, அறிவைப்பெறும் வாயிலே*
*தவிர சிந்தனையே அறிவன்று.*
*கல்வி, அறிவைப் பெறும் வாயிலே*
*தவிர கல்வியே அறிவன்று.*
*கேள்வி, அறிவைப் பெறும் வாயிலே*
*தவிர கேள்வியே அறிவன்று.*

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்




திருவளர் செல்வனுக்கு,

நல்வாழ்த்துக்கள் !

தத்துவ சிந்தனையில் உயிர் பற்றிய ஆய்வு ஒன்றுதான் தொடர்ந்து நடை பெற்றுக்கொண்டிருக்கிறது. இன்னமும் ஒருமித்தபடி கிடைக்கவில்லை. உயிரைப் பற்றிய கொள்கையில்தான் பல சமயங் கள் மாறுபடுகின்றன. உயிரைப் பற்றிச் சாங்கிய மதம் என்ன கூறுகிறது? திருவளர் செல்வ, சாங்கியர் கொள்கை உயிரும் உடலும் முற்றிலும் மாறுபட்ட பொருள்கள் என்பதாகும். இதைவிட வியப்பு உலகாயதம்-அதாவது கண்ணால் காண்பது மட்டுமே மெய் என்ற கொள்கை யுடையவர்கள்; உடலே உயிர் என்ற கொள்கையுடையவர்கள். உடலிலேயே தோன்றும் ஓர் இயங்கும் சக்தியே உயிர் என்பது உலகாயதர் கொள்கை. வேதாந் தம், "உயிர் மூலப் பொருள்; உயிரி லிருந்து உடல் தோன்றுகிறது" என்று கூறுகிறது. சாங்கியத்தின்படி உயிரும் உடலும் வேறு வேறு பொருள்கள். ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியதில்லை. தோன்றவும் இயலாது. சாங்கியர், உயிரைப் "புருடன்" என்று அழைக்கின் றனர். உடல் பிரகிருதியிலிருந்து தோன்றுகிறது.

திருவளர் செல்வ, உயிரைப் பற்றிய உலகாயதக் கொள்கை ஆய்வுக்குரியது. உடலில் ஒரு சக்தி தோன்றி மறைகின் றது என்றால் ஏன் இந்தத் தோற்றம்? எதற்காக ஒடுக்கம் அல்லது மறைவு? உடல்கள் தோன்றுவானேன்? அழிவா னேன்? இந்த விரிந்த பரந்த உலகுக்குத் தான் என்ன நோக்கம்? இந்த வினைக் களுக்கு உலகாயதர் தெளிவான விடை தருவதில்லை. அவர்கள் சொல்லும் ஒரே விடை தற்செயல் என்பதும் சுபாவம் (இயல்பு) என்பதுமேயாம். ஆனால், தற்செயல் நிகழ்வுகளோ, இயல்பான சுபாவங்களோ உலகின் வளர்ச்சிக்கு-மாற்றத்திற்கு விசையாக இருக்க முடியுமா? வல்லமைக்கு வாய்ப்பில்லை; திட்டங்கள் இல்லை; இலட்சியம், முன் னேற்றம் ஆகியவைகள் இல்லை. இவை யெல்லாம் இல்லாத வாழ்க்கைதான் எதற்கு? உலகம்தான் எதற்கு? திருவளர் செல்வ, அடுத்து உயிரிலிருந்து உடல் தோன்றுகிறது என்ற வேதாந்தக் கொள்கை. உயிர், அறிவுப் பொருள்; நிலையானதும் கூட. அது ஏன் நிலையற்ற உடலைத் தோற்றுவிக்கிறது? அறிவற்ற இத்தச் சடவுலகம்-பொருளற்ற வுலகம் ஏன் தோன்றி அழிகிறது? நிலையானதும்-தூய்மையானதும், நிறைநலமானதுமான

உயிர், ஏன் நிலையற்ற—தூய்மையற்ற—நிறைநலமில்லாத உலகத்தைத் தோற்றுவிக்கிறது. வேதாந்தத்தில் இதற்குத் தெளிவான விடையில்லை. ஆனால், வேதாந்தம் உலகின் தோற்றத்தையும் அழிவையும் ஒத்துக்கொள்வதில்லை. கானல் நீரைப்போல அஃது ஒரு தோற்றம் என்று கூறுகிறது. இக்கொள்கையைத்தான் பாரதி,

“ நிற்பதுவே நடப்பதுவே,
பறப்பதுவே நீங்களெல்லாம்
சொற்பனந்தானோ ?—பல
தோற்ற மயக்கங்களோ ?”

என்று கேட்கின்றான்.

செல்வ, உயிர் பற்றிய சாங்கியர் கொள்கை ஓரளவு செப்பமானது. ஒன்றிலிருந்து ஒன்று தோன்றுவதில்லை என்பது சாங்கியம். பிரகிருதி, புருடன் இவ்விரண்டும் வெவ்வேறு நிலையான மூலப்பொருள்கள். பிரகிருதி விரிவதும் ஒடுங்குவதும் புருடனுக்காகவேயாம். பிரகிருதி போகத்திற்குரிய பொருள்களையும் அவற்றைத் துய்த்தற்குரிய கருவியாகிய உடல்களையும் தோற்றுவிப்பதும் புருடனின் பொருட்டேயாம். இவ்விரிந்த உலகமும் அதிலுள்ள எண்ணற்ற பொருள்களும் தோன்றுவதும் ஒடுங்குவதும் உயிர்களின் நலனுக்காகவே என்பது சாங்கியத்தின் திரண்ட கருத்து. ஏன்? உயிர் ஒன்று உண்டு என்ற முடிவை அவர்கள் இந்த உலகில் இருந்துதான் பெற்றனர். உயிர், கண்ணுக்குத் தெரியும் பொருளல்ல. ஊகத்தின் மூலம் தான் அறிய முடியும். இந்த வகையில் சாங்கியர் நிறைய முயற்சி செய்திருக்கின்றனர். உயிர் உண்டென்பதற்குச் சாங்கியர் காட்டும் சில ஊகங்களை உனக்குத் தெரிவிப்பது நல்லது. இவ்வுலகில் உள்ள பொருள்கள் உயிரற்ற சடப்பொருள்கள். ஆயினும், போகத்திற்கு உரியன. அதாவது இன்பத்திற்குரியன. சடப்பொருள்கள் தாமே துய்த்தல்-இன்புறுதல் இயலாது. பழத்தின் சுவையைப் பழம் சுவைக்க முடியுமா? அல்லது பழத்திற்குத் தெரியுமா? பழத்தின் சுவையைச் சுவைத்திட ஓர் அறிவுப் பொருள் தேவை. இச்சுவைப் பொருள்கள் உண்மையே இவற்றைச் சுவைப்பாரும் வேண்டும் என்ற உண்மையைப் புலப்படுத்துகிறது. அறிவற்ற பொருள்கள் அறிவுடைய பொருள்களுக்குச் சாதனமே. கண்ணுக்குப் புலனாகும் அறிவற்ற பொருள்கள், கண்ணுக்குப் புலனாகாத ஓர் அறிவுப் பொருளை அவாவி நிற்கின்றன; இயக்க, பயன்படுத்திட என்பதே உண்மை. இதுவே சாங்கியர் கொள்கை அறிவற்ற பொருள்களைக் கண்டபொழுது அதனைப் பயன்படுத்துவோர் வேண்டும் என்று அனுமானித்து உயிரைக் காட்டும் சாங்கியர் அப்பொருளைப் படைத்தோனைக் காட்டுவதில்லை. இது நினைவிற் கொள்ளத் தக்கது. சாங்கியர், உடலின் வேறாக உயிர் உண்டு என்பதற்குத் தெரிந்த ஒரு காரணத்தையும் காட்டுகின்றனர். துன்பங்கள் காரணமாகப் பல சமயங்களில் பலர் உடலைவிட்டு நீங்க விரும்புகின்றனர். அங்ஙனம் நிகழ்வதே தற்கொலை. இந்த உலகை விட்டுத் தப்பிக்க விரும்புவதும் ஓர் உடலாகவே இருக்க முடியாது. அப்படி இருக்குமானால் துன்ப நீக்கம் ஏது? திருவளர் செல்வ, ‘புருட’னின் இயல்புதான் என்ன? உடலோடு சேராத நிலையில் புருடன் அறிவே உருவானது. அறிவு, புருடனின் குணமல்ல. புருடன் அறிவு மயமானது; எங்கும் நிறைந்தது; என்றும் உள்ளது;

மாற்றங்கள் இல்லாதது; இயங்குவதில்லை. புருடனின் இயல்பு அனுபவித்தல் மட்டுமேயாகும். புருடன், அறிவாக இருந்தும் உலகப்பொருள்களை அறியும் அறிவு, பிரகிருதியோடு சேரும் பொழுது தான் ஏற்படுகிறது. செயலும், பிரகிருதியும் சேர்க்கையினாலேயாம். பிரகிருதி, பகுதிகளால் ஆயது. புருடன் எங்கும் நிறைந்தது; பகுதிகளற்றது, ஆயினும், ஓர் உடல் இருப்பதும், பின் பிரிவதும், புருடனுக்குப் பிரகிருதியின் சேர்க்கையினால்தான் கிடைக்கிறது; என்று சாங்கியம் விளக்குகிறது. அதாவது, புருடனும் பிரகிருதியும் ஒத்து இயங்கவேண்டும். புருடன் இயங்கா நிலையிலிருக்கும் உடம்பு. பிரகிருதி ஒரு குருடன். முடவனும் குருடனும் சேர்ந்தால் இருவருமே இயங்கலாம். ஒருவருக்கொருவர் இயக்கத்திற்குத் துணையாயிருப்பர். இது போன்றதுதான் புருடன்-பிரகிருதி கூட்டு.

புருடன் அல்லது உயிர் பல என்பதே சாங்கியர் கொள்கை. உயிர் ஒன்று எனில் பிறப்பும் இறப்பும் ஒன்றாயிருக்க வேண்டுமே! உயிர் ஒன்றாயின் உடற்குறைகளும் ஒன்றாயிருக்க வேண்டுமே! உயிர்க்குலத்தின் திறமைகளும் வேறுபடுகின்றனவே! என்ற காரணங்களைக் காட்டி உயிர், பல என்று சாங்கியம் திட்டமாக முடிவு செய்கிறது. ஆனால், வேதாந்தம் உயிர் பல என்பதை ஒத்துக்கொள்வதில்லை. உயிர் வேறுபாடுகள் உயிர்க்குரியனவல்ல. அவை, பிரகிருதியின் சேர்க்கையால் ஏற்பட்டவை என்பது வேதாந்தம். சாங்கியக் கொள்கைப்படி உயிர் ஒரு மூலப்பொருள். அதையே புருடன் என்று கூறும். உயிர் தங்கும் உடல்களும் உலகில் பல்வகைப் பொருள்களும் அறிவற்றவை. இந்த அறிவற்ற பொருள்கள் பிரகிருதி என்ற மூலப் பொருளிலிருந்து தோன்றுகின்றன என்பதே சாங்கியத்தின் கொள்கை.

திருவளர் செல்வ, சாங்கியர் கொள்கைப்படி 'புருடன்', 'பிரகிருதி' என்ற இரண்டு மூலப் பொருள்கள் உள்ளன. இரண்டு வேறு வேறு மூலப் பொருள்களைக் கொள்வதால் தத்துவ ஆராய்ச்சியில் ஏற்படும் சிக்கல்கள் என்ன? பிரகிருதிக்கும் புருடனுக்கும் உள்ள தொடர்பு யாது? பிரபிருதியிலிருந்து உலகம் எப்படித் தோன்றுகிறது? என்பனவற்றை யறிந்து கொள்ள ஆர்வமிருக்கும். பிரகிருதி அதாவது உலகம் மாற்றத்தையே இயல்பாகவுடையது. தோன்றுவதும் ஒடுங்குவதும் அதன் தொழில். 'புருடன்' மாற்றமில்லாததது; நிலையானது. இங்ஙனம் இரண்டு நிலையானவை; சமமானவை என்று கொண்டால் வினாக்கள் தோன்ற இடமுள்ளன. பிரகிருதி சுதந்திரமுடையது; இயங்கவல்லது. எனினும், அதற்கென்ன பயன்? பயன் அடைவன உயிர்களே. உயிர்கள் பயனடைந்து விட்டால் பிரகிருதியால் பயனில்லை. ஆனால், சாங்கியர் உயிர்கள் எண்ணற்றன என்பதால் தொடர்ந்து உலகம் பயன்படும் என்று கூறுகின்றனர். எப்படியிருந்தாலும் பௌத்தம், வேதாந்தம் ஆகிய கொள்கைகளில் ஒன்றினை சாங்கியம் சாரும் இயல்புடையதாக இருக்கிறது. இதனை அடுத்த கடிதத்தில் எழுதுகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

குன்றக்குடி அடிகளார்




## (2) கண்ணன்

எழிலார் மாடங்களையும் குயிலார் சோலைகளையுமுடைய திருக்கோட்டியூர் எம்பெருமானே வடமதுரையில் கண்ணனாகப் பிறந்தான் என்று பெரியாழ்வார் கொண்டாடுகிறார். வடமதுரையில் கம்ஸன் மாளிகைச் சிறையருகில் ஆவணி மாதத்து ரோகிணி நக்ஷத்திரத்தில் கண்ணன் அவதரித்தான். சங்கு சக்கரங்களோடு பிறந்த அப்பெருமானைக் கண்ணாரக் கண்ட தேவகீ-வசுதேவர்கள் இக்குழந்தையைக் கம்ஸன் கண்டால் என்ன தீங்கு நேருமோ என அஞ்சினார்கள். "குழந்தாய் உன் சங்கு சக்கரங்களை மறைத்துக் கொள்" என்று வேண்டினார்கள். கண்ணனும் அப்படியே அவைகளை மறைத்துக்கொண்டான்.

### யமுனையின் பெருமை

அப்பொழுது பெருமழை பெய்து கொண்டிருந்தது. யமுனை இருகரையும் அழியும்படி வெள்ளம் பெருக்கெடுத்தோடிக் கொண்டிருந்தது. அந்தக் காரிருளில் கண்ணனைக் கூடையிலிட்டுத் தலையில் சுமந்துகொண்டு வசுதேவர் திருவாய்ப்பாடியை நோக்கிப் புறப்பட்டார். யமுனையாற்றைக் கடக்க வேண்டும்? என் செய்வார் பாவம்! ஆனால் என்ன அதிசயம்! யமுனா நதி வசுதேவர் இறங்கிச் செல்லுமாறு வெள்ளம் குறைந்து வழிவிட்டதாம். ஆம்! பரம்பொருளான அக்கண்ணனைவிடவா அக் கம்ஸன் உயர்ந்தவன்? அக்கம்ஸனுடைய அரண்மனை ஓரத்திலே வெகு சமீபத்தில் யமுனை ஆறு ஓடிக்கொண்டிருந்தும் அது கம்ஸனுக்கு அஞ்சாமல் எம்பெருமான் கண்ணனுக்கு உதவியாகத் தொண்டு செய்தது. இந்தப் பெருமை யமுனை ஆற்றுக்கு உண்டு. வேறு ஆறுகளுக்கு இல்லை.

முன்பு ஒருகால் இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றபொழுது கோதாவரி ஆற்றின் வழியாகத்தான் சென்றான். சீதை புலம்பியழுததைக் கண்டும் கேட்டுமிருந்த அந்தக் கோதாவரியாறு ஆயிரம் மைல்களுக்கப்பால் ஆட்சி புரியும் இராவணனுக்குப் பயந்து சீதையைப் பற்றிய செய்தியை இராமன் வினவியபொழுதும் கூறவில்லை. ஆனால், கம்ஸன் மாளிகையருகே செல்லும் இந்த யமுனை ஆறே கம்ஸனுக்குப் பயப்படாமல் கண்ணனுக்கு உதவியது. யமுனை ஆற்றின் இந்தப் பெருமையை உணர்ந்த ஆண்டாள் தாம் இயற்றிய திருப்பாவையில் "மாயனை மன்னு வடமதுரை மைந்தனை தூய பெருநீர் யமுனைத் துறைவனை" என்று போற்றியுள்ளார்.

திருவாய்ப்பாடிக்குச் சென்ற வசுதேவர் நந்தகோபருடைய வீட்டுக்குச் சென்றார். தன்னேரில்லாத் தனிப் பிள்ளையான கண்ணனை இருகை நீட்டி யசோதை வாங்கிக் கொண்டாள். நந்தகோபரும் வைத்த கண் வாங்காமல் கண்ணன் வடிவழகைப் பருகிக் கொண்டிருந்தார். வசுதேவரும் வந்த காரியம் முடிந்ததென்றும், உரியவர்களிடத்தில் கண்ணனை ஒப்படைத்து விட்டோம் என்றும் மனமகிழ்ந்து பொழுது புலருமுன்பே சிறைச் சாலைக்குத் திரும்பி விட்டார்.

கா. அ. மணவாளன், எம்.ஏ.,பி.எல்.

கண்ணன் பிறந்தான்

ஆம்! அன்று தான் கண்ணன் பிறந்தான். கம்ஸன் மாளிகைச் சிறையில் கண்ணன் பிறந்தாலும் திருவாய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த அன்றுதான் பிறந்ததாகப் பெரியோர்கள் கொண்டாடினுர்கள்.

மக்கள் மகிழ்ச்சியால் இங்கும் அங்கும் ஓடுகிருர்கள். ஓடும்போதே விழுகிருர்கள்; ஒரே ஆனந்தம், ஆரவாரம், மகிழ்ச்சிப் பெருக்கால் நெய்யையும் பாலையும் தயிரையும் உறிகளோடு அறுத்து வாரி வழங்குகிருர்கள். உருட்டி நின்ருடுகிருர்கள். இன்னது செய்கிருேம் என்பதையே மறந்து ஆய்ச்சிமார்கள் ஆடிப்பாடி ஆரவாரம் செய்கிருர்கள். ஆழ்வார் மனக் கண்ணுல் இவைகளைக் கண்டு பாடிய பாடலைப் பாருங்கள்:

“ ஓடுவார் விழுவார் உகந்தாலிப்பார்
நாடுவார் நம்பிரான் எங்குத் தானென்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்ருய்ப்பாடியே ”

“ உறியை முற்றத்து உருட்டி நின்ருடுவார்
நறு நெய் பால் தயிர் நன்ருகத் தூதுவார்
செறிமென் கூந்தல் அவிழத் திளைத்து
எங்கும் அறிவழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே”

இடைச்சாதிக்கு ஏற்றபடி உறியையும் மழு என்னும் ஆயுதத்தையும் பசுமேய்க்கிற கோலையும் ஓலைப் பாயையும் உடையவர்களான இடையர்கள் மகிழ்ச்சியால் தங்கள் பற்கள் வெளியே தெரியும்படி நெய்யாடிக் களிக்கின்ருர்கள்.

யசோதைப் பிராட்டி கண்ணனை நீராட்ட நினைத்தாள். கடாரத்தில் நீரைப் பூரித்து வைத்தாள். கத்தூரியையும், பசுமஞ்சளையும் சேர்த்து வைத்தாள். குழந்தையின் கையையும் காலையும் நீட்டி நிமிர்த்துப் பசுமஞ்சளைப் பூசினுள். வாசனைச் கண்ணங்களும், நறுமணங் கமழும் குறுவேர், வெட்டிவேர், விளாமிச்சி வேர் போன்ற வேர்களையும் மூலிகைகளையும் கொண்ட நறு நீரால் நீராட்டினுள். அப்படி நீராட்டும் வேளையில் கண்ணனது நாக்கை வழிப்பதற்காக வாயைத் திறக்கச் சொன்னுள். அவ்வளவுதான்! அந்த மாயக் கண்ணன் வாயில் யசோதை ஏழு உலகங்களையுமே கண்டதாக ஆழ்வார் கூறியுள்ளார்.



கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய வாட்டிப் பசுஞ் சிறுமஞ் சளலால்
ஐய நாவழித்தாளுக்கு அங்காங் திட
வையமே முங்கண்டாள் பிள்ளை வாயுளே.

கண்ணனுடைய வாயில் எல்லா உலகங்களையும் கண்ட யசோதை மகிழ்ச்சியும் வியப்பும் கொண்டாள். ஆனந்தக் கூத்தாடினுள். ஆயர்பாடிப் பெண்களையெல்லாம் கூவி அழைத்தாள். இக்கண்ணன் சாதாரணமான இடைப்பிள்ளையல்லன். பரம்பொருளே இப்படி வந்து அவதரித்திருக்க வேண்டும் என்று ஐயுற்றுக் கூறுகிருள்.

வாயுள் வையகங் கண்ட மட நல்லார்
ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்
மாயனென்று மகிழ்ந்தனர்மாதரே.

இப்படி வளர்ந்து வரும் கண்ணன் பல குறும்புகளைச் செய்கிருன். அக்குறும்புகளைப் பொறுப்பதற்கு வேண்டிய ஆற்றல் யசோதையிடம் இல்லையாம். இந்நிலையை ஆழ்வார் மிகக் கவின் பெறச் சித்தரிக்கிருர். கண்ணனைத் தொட்டிலிட்டுத் தாலாட்டுப் பாட முடியவில்லையாம். அத்தொட்டிலே சிதையும்படி தன் கால்களாலே உதைக்கிருனும்; ஐயோ குழந்தைக்குக் கால் வலிக்குமே என்று எடுத்து இடுப்பில் வைத்துக் கொள்வாளாம் யசோதை. அப்போது அக்குழந்தை இடுப்பிலிராமல் எம்பிக் குதித்து இடுப்பையே முறித்து விடுகிறதாம். ‘துஷ்டப் பயல்’ இப்படித் தொல்லை தருகிருனே என்று ஆசை தீர மார்போடு அணைத்துக் கொள்வாளாம். அப்படி அணைக்கும் போது தன் கால்களாலே வயிற்றிலே உதைத்துத் துன்புறுத்துவானும். அம்மம்ம! இந்தப் பொல்லாத பிள்ளையை நான் எவ்வாறு வளர்ப்பேன்! எனக்குச் சக்தி இல்லையே! மெலிந்து போனேனே என்று புகார் செய்யும் தாய் பாசுரமாகப் பாடிய பாட்டைப் பாருங்கள்:

கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில் மருங்கையிறுத்திடும்
ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான் மெலிந்தேன்
நங்காய்

என்பதே ஆழ்வார் பாட்டு.

### கண்ணன் வடிவழகு

கண்ணன் தொட்டிலில் படுத்துக் கிடக்கிருன். அவன் தன் கால் கட்டைவிரலை வாயிலிட்டுச் சுவைக்கின்ருன். 'தேனே மலரும் திருப்பாதம்' என்னும் அவ்வெம்பெருமானுடைய திருப்பாத கமலங்களைப் பார்க்கிருள் யசோதை. பூரித்துப் போகிருள். பவழம் போன்ற வாயினையுடைய தன் தோழிமார்களைக் கூவியழைக்கிருள். வாருங்கள் பெண்கள்-வந்து பாருங்கள். கண்ணன் திருப்பாத கமலங்களை வந்து பாருங்கள். மணிவண்ணன் பாதங்களின் பத்து விரல்களும் முத்தும் மணியும் பொன்னும் கொண்டு இழைத்தன போலப் பிரகாசிப்பதைப் பாருங்கள்.

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
எங்கும் பத்து விரலும் மணிவண்ணன்
பாதங்கள்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற்போல்
ஒத்திட்டிருந்தவர் காணீரே! ஒண்ணுதலீர்
வந்து காணீரே!

யசோதை பாலைக் கறந்து காய்ச்சித் தோய்த்து கடைகிருள். அந்தத் தோய்த்த தண் தயிரில் வெண்ணெய் உண்டாயிற்று. அவ்வெண்ணெயை உருக்கி நெய்யாக்கித் தடாக்களிலே வைத்து விட்டு உறங்குகிருள். மாயக் கண்ணன் மெதுவாகத் தவழ்ந்து சென்று ஒவ்வொரு தடாவாக ஒன்றும் மிச்சமில்லாமல் வாரி உண்டான். யசோதை கண்விழித்துப் பார்க்கிருள். இவ்வளவு நெய்யை வாரியுண்டால் எப்படி ஜீரணமாகும் என்று எரிச்சல் கொள்கிருள். கவிழ்த்தும் உருட்டியும் விட்ட தடாக்களைப் பார்க்கிருள். நெய்யும் வெண்ணெயும் பாழாய் விட்டதே என்ற கோபம் ஒரு புறமிருந்தாலும், அவைகளை உண்ட கண்ணன் வயிற்றுக்கு என்ன தீங்கு வருமோ என்று அஞ்சும் பாசம் ஒருபுறம். கண்ணன் கையைப் பற்றி இழுத்தாள். மத்திலே சுற்றிப் பழகின தாம்புக் கயிருலே அடிப்பதற்குக் கையை ஓங்குகிருள். அப்போது கண்ணன் பயத்தாலே வேறு பக்கமாகத் தவழ்ந்து மெதுவாகச் செல்லப் பார்க்கிருன். அந்தத் தவழ்ந்த நிலையில் அக்கண்ணனின் முழந்தாளைக் காண்கிருள். மயங்கிப் போகிருள். என்ன அழகு, என்ன அழகு என்று வியந்து பாராட்டுகிருள். தோழிமார்களை அழைத்து அவ்வழகையும் காட்டி மகிழ்கிருள்.

உழந்தாள் நறுநெய் ஓரோ தடாவுண்ண
இழந்தாளெரிவினுல் ஈர்த்தெழில் மத்தின்
பழந்தாம்பா லோச்சப் பயத்தால்
தவழ்ந்தான்
முழந்தாளிருந்தவா காணீரே முகில்
முலேயீர் வந்து காணீரே

என்ற பாடலில்தான் எவ்வளவு பாச உணர்ச்சி காணப்படுகின்றது.

இவ்வாறு குறும்புக் கண்ணன் தன் வீட்டிலுள்ள பாலேயும் நெய்யையும் உருட்டிக் கொட்டி விளையாடினுலோ, உண்டாலோ பரவாயில்லை. கோகுலத்திலுள்ள இடையர் மனைகளிலெல்லாம் சென்று அங்குள்ள பால் தயிர் வெண்ணெய் முதலியவற்றையும் தோழர்களோடு திருடியுண்ணத் தலைப்பட்டான். ஆயர்பாடிப் பெண்கள் எல்லாம் வந்து யசோதையிடம் முறையிட்டார்கள். யசோதைக்குக் கோபம் வந்தது. கண்ணனைக் கூப்பிட்டாள். அவன் வயிற்றில் கயிற்றினுல் கட்டி அருகேயிருந்த உரலோடு பிணித்து விட்டாள்.

மிகப் பெரிய உரலோடு கட்டுண்டிருந்த அக்கண்ணனே யசோதை ஆற்று நீர் கொண்டு வர வெளியே சென்றிருக்கும் நேரத்தில் அவ்வுரலேயே இழுத்துக் கொண்டு தவழ ஆரம்பித்தான். அங்கேதான் இரண்டு மருத மரங்கள் இணைந்து வளர்ந்திருந்தன. அம்மரங்களின் இடையிலே தான் சென்று உரலை வலித்தான். அவ்வளவுதான்! அம்மரங்களிரண்டும் வேரோடு சாய்ந்து விட்டன. ஓசை கேட்டு வேகமாக வந்த யசோதை கண்ணனைக் கண்டாள். கண்ணன் உரலோடு தவழ்ந்து வந்ததும், மருத மரம் முறிந்து கிடந்ததும் அவளுக்குப் பெருவியப்பை யூட்டியது. அப்போது அக்கண்ணன் ஒரு கையை நிலத்தில் ஊன்றியபடி மற்ரெரு கையை உயர்த்தித் தவழ்ந்த நிலையிலும் நிமிர்ந்து தன் மார்பின் வடிவழகைக் காட்டினுன். கௌஸ்துபமணி குலாவித் திகழும் அவன் மார்பு அவளை வசீகரித்தது! அவ் வடிவழகிலே தான் ஈடுபட்டு மயங்கியதோடு தோழிமார்களையும் அழைத்துக் காணச் சொன்னுள். பாட்டைப் பாருங்கள்:

# "கொற்றவை வழிபாடு"

ஏ. ஏகாம்பரநாதன், எம்.ஏ.,

பண்டைத் தமிழ் மக்கள் கொற்றவையைப் பாலை நிலத்திற்குரிய கடவுளாக வழிபட்டனர். ஐவகை நிலங்களுக்குரிய கடவுளரில் கொற்றவை மட்டுமே பெண் தெய்வமாகும். தமிழருக்கே உரித்தான இத்தெய்வம், ஆரியப் பண்பாட்டின் கலப்பினுல் துர்க்கை என்னும் பெயர் பெற்ருளென்பது அறிஞர் பலரது ஆய்வுரையாகும். சங்க காலத்தில் பாலை நில மக்களால் வழிபடப்பட்டு வந்த இத்தெய்வம் படிப்படியாகப் பிற நிலப்பகுதி மக்களாலும் வழிபடப்பட்ட செய்திகள் இலக்கியங்களில் பரவலாகக் காணக் கிடக்கின்றன.

## இலக்கியச் சான்றுகள்

தொல்காப்பியர் காலத்தில் கொற்றவை, மறத்தொழில் புரியும் வீரர்கள் வணங்கும் தெய்வமாகத் திகழ்ந்தாள். (புறத். சூத். 4). சங்க இலக்கியங்களில் இவ்விறைவி பாலை நிலத்திற்குரிய தெய்வமெனவும், போரில் வெற்றியைக் கொடுப்பவளெனவும், (திருமுருகு 253), எல்லா வல்லமைகளும் படைத்த இவள் பெருங்காட்டிலுறைபவள் என்றும் (கலி. 89:8) கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகார காலத்தில் கொற்றவை வழிபாடு மிகச் சிறந்திருந்ததை வேட்டுவ வரிப் பகுதியில் காணலாம். இவ்விறைவி நஞ்சுண்டு கறுத்த கண்டத்தினையும், கையினில் சூலத்தினையும், யானையின் தோலினை ஆடையாகவும், சிங்கத்தின் தோலினை மேகலையாகவும், சிலம்பு, கழல் முதலியனவற்றைக் காலணிகளாகவும் அணிந்து, மயிடாசுரன் தலையின் மீது நிற்பவள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அக்கால வேட்டுவ மக்கள் இத்தெய்வத்திற்கு வண்ணம், சுண்ணம், நறுஞ்சாந்து, பொரி, பூ முதலியன படைத்து வழிபட்டதனைச் சிலப்பதிகாரத்தால் அறிகிருேம். (சிலம்பு. 12: 59–67). வேட்டுவ வரியில் இவளுக்கு அமரி, குமரி, கவுரி, சமரி, நீலி, சூலி, மாலவற்கிளங்கிளை, ஐயை செய்யவள், பாய்கலைப்பாவை முதலிய பெயர்கள் வழங்கியுள்ளமையைக் காணலாம். சிலப்பதிகார காலத்தில் கொற்றவை திருமாலுக்குத் தங்கையாகக் கருதப்பட்டாள் என்பதை 'மாலவற் கிளங்கிளை' எனும் கூற்று இனிது விளக்குகிறது. மேலும் இவள் கவுரி (கௌரி) என்னும் பெயரினைப் பெற்றிருந்ததால் உமையன்னையின் ஒரு அம்சமாகவும் கருதப்பட்டாள் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பிற்கால இலக்கியங்களிலும் இச்செய்தி மிகுதியாகக் காணப்படுகிறது.

## கொற்றவைக் கோயில்கள்

இந்து சமயத்திலுள்ள பிற தெய்வங்களுக்குத் தனிக்கோயில்கள் எடுப்பித்தமை போன்று கொற்றவைக்கும் பல தனிக்கோயில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. மதுரை நகர்ப் புறத்தில் ஐயை என்னும் கொற்றவையின் கோட்டம் ஒன்று அக்காலத்தில் இருந்திருக்கிறது. (சிலம்பு. 11: 214-215). சக்கரவாளக் கோட்டத்திலுள்ள கொற்றவைக் கோயில், பலி கொடுக்கும் அகன்ற முற்றத்தினையும், பலி கொடுத்தலால் தொங்க விடப்பட்ட தலைகளையுடைய நெடுமரத்தினையும் உடையதாக இருந்ததென்று மணிமேகலை கூறுகின்றது. (மணி: 6: 50–53). தொண்டை நாட்டை ஆண்ட பல்லவர் காலத்தில் மாமல்லையில் தோற்றுவிக்கப்பட்ட திரௌபதிரதம் கொற்றவைக் கோயிலாகும். இக்கோயிலின் கருவறையுள் இறைவி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிருள். கோயிலின் புறச்சுவர்களிலும் கொற்றவையின் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

சோழப் பேரரசை நிறுவிய விசயாலயன் தஞ்சையில் நிசும்பசூதனி (கொற்றவை) கோயிலொன்று கட்டி, அதில் அவ்விறைவியைப் பிரதிட்டை செய்தான். இச்சிற்பம் தற்போது உக்கிரமாகாளி என்ற பெயருடன் விளங்குகிறது. ஆனுல் அண்மையில் தஞ்சையில் கண்டுபிடிக்கப்பட்ட வேருெரு சிற்பமே நிசுபசூதனி என்றும் கூறப்படுகிறது. எவ்வாருயினும் தஞ்சையில் விசயாலயனுல் கொற்றவைக்குத் தனிக் கோயில் கட்டப்பட்டதென்பது உண்மையாகும்.

முதலாம் இராசேந்திரன் ஆட்சியில் காஞ்சி மாநகரில் கருக்கினிலமர்ந்தவள் என்னும் கொற்றவைக் கோயில் கட்டப்பட்டுள்ளது. இக்கோயிலின் கருவறையுள் இறைவி எட்டு திருக்கரங்களுடன், மகிடாசுரன் மீது அமர்ந்த வண்ணம் காட்சியளிக்கிருள். சோழர் காலத்தில் கொற்றவைக்கென கட்டப்பட்ட தனிக்கோயில்களுள் இது ஒன்றே பெரிய கோயிலாகும்.

## சிற்பங்கள்

தமிழகத்திலுள்ள குடைவரைக் கோயிற் சிற்பங்களுள் மாமல்லையிலுள்ள மகிடமர்த்தினி குடைவரைக் கோயிற் சிற்பம் மிகவும் வனப்பு வாய்ந்ததாகும். இக்கோயிலின் வடபுற

உட்சுவரில் கொற்றவை சிங்கத்தின் மீதமர்ந்து, கையினில் பல்வேறு படைக்கலன்களைக் கொண்டு, எதிரில் நிற்கும் எருமைத்தலை அரக்கனைத் தாக்கும் காட்சி காண்போர் வியக்கும்வண்ணம் உள்ளது. இவ்வூரிலுள்ள வராகர், ஆதிவராகர் குகைக் கோயில்களிலும் கொற்றவைச் சிற்பங்கள் உள்ளன. இறைவியின் இருமருங்கிலும் வழிபடுவோர், கணங்கள், பணிப்பெண்கள் முதலியோர் இடம் பெற்றுள்ளனர். சிங்கவரம் குடைவரைக் கோயிலிலும் அழகுமிக்க துர்க்கையின் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. மேற்குறிப்பிடப் பட்டுள்ள பல்லவர் காலக் கொற்றவைச் சிற்பங்களில் கோபம், வீரம் முதலிய குணங்களுக்குப் பதிலாகக் கனிவு, மென்மை முதலிய பண்புகளையே காணலாம். பாண்டியர் காலக் குடைவரைக் கோயில்களாகிய மலையடிப் பட்டி, குன்னக்குடி, திருப்பரங்குன்றம் முதலிய வற்றிலும் மகிடமர்த்தினியின் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. மாமல்லை (மகிடமர்த்தினிக் குகை), சிங்கவரம், மலையடிப்பட்டி, திருத்தங் கால் முதலிய இடங்களிலுள்ள கொற்றவையின் சிற்பங்களுக்கு எதிர்புறத்தில் பாம்பணையில் துயிலும் பரந்தாமனது சிற்பங்கள் காணப்படுகின்றன. ஒரே குடைவரைக் கோயிலில் கொற்றவையும், திருமாலும் எதிரெதிராகக் காணப்படுவதை நோக்குங்கால் அக்காலத்தில் கொற்றவை திருமாலின் தங்கையென ஏற்றுக் கொள்ளப்பட்டாள் என்பதை நினைவுறுத்துகிறதன்றோ! (சென்னைப் பல்கலைக் கழக மலர் 1960. பக் 154).

மேற்குறிப்பிடப்பட்டவைகளன்றி கட்டடக் கோயில்களில் பொதுவாக அர்த்த மண்டபத்தின் வடபுறத் தேவகோட்டத்தில் கொற்றவையை நிறுவுவது வழக்கமாகும். பல்லவர், சோழர், பாண்டியர் கால சைவ சமயக் கட்டடக் கோயில்களில் கொற்றவைக்கோர் இடம் அளித்திருப்பது முக்கியமாகக் குறிப்பிடத்தக்கதாகும். தமிழகத்தில் பல்லவராட்சியில்தான் எண்ணிறந்த கொற்றவைச் சிற்பங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இதனை நோக்கும் போது பல்லவர் காலத்தில் கொற்றவைக்கு மிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது அறியற்பாலதாகும்.

பாய்கலைப்பாவை

கொற்றவைக்குச் சிங்கம் மட்டுமன்றி மானும் ஊர்தியாக விளங்கியிருக்கிறது. கலைமானை ஊர்தியாகப் பெற்றவளாதலின் இவள் பாய் கலைப்பாவை என அழைக்கப்பட்டாள். இதனை,

"ஐயை செய்யவள் வெய்யவாள் தடக்கைப்
பாய் கலைப்பாவை பைந்தொடிப் பாவை"

என்னும் பகுதி அறிவுறுத்துகிறது. (சிலம்பு. 12: 68-69). பல்லவ, முற்காலச் சோழ சிற்பங்கள் சிலவற்றில் கொற்றவையின் தலைக்கு மேலாக சிறிய அளவில் சிங்கமும், மானும் தலையளவு மட்டிலும் செதுக்கப்பட்டுள்ளன. ஆனால் தனியாக மானை மட்டிலும் வாகனமாகக் கொண்ட கொற்றவைச் சிற்பங்கள் தமிழகத்தில் இரண்டு கிடைத்துள்ளன. இவை தற்போது சென்னைப் பல்கலைக் கழகத்திலும் (பேராசிரியர் இரா. சம்பகலக்குமி, அ. சுவாமி அவர்களால் கண்டுபிடிக்கபபட்டது) சென்னை அரும் பொருள் கலைக்கூடத்திலும் உள்ளன. முதலாவது சிற்பம் பல்லவர் காலத்தையும் இரண்டாவது சிற்பம் சோழர் காலத்தையும் சார்ந்தவையாகும்.

நவகண்டமும், தலைப்பலியும்

முற்காலத்தில் கொற்றவைக்குத் தலைப்பலி இடுவது வழக்கமாக இருந்திருக்கிறது. இதனை சிங்கவரம், மாமல்லை, திருப்பரங்குன்றம், திருத்தங்கால் முதலிய இடங்களிலுள்ள குகைக்கோயில் சிற்பங்களில் காணலாம். இச்சிற்பங்களில் இறைவியின் இருமருங்கிலும் இரு ஆடவர் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவர்களுள் ஒருவர் தன் தலையினை அரிந்து இறைவிக்குப் பலியிடுவதாகக் காணப்படுகிறார்.

'நவகண்டம் கொடுத்தல்' என்பது உடலிலுள்ள ஒன்பது பகுதிகளிலிருந்து தசையினை அரிந்து இறைவிக்கு நேர்த்திக் கடன் செலுத்துவதாகும் கம்பவர்மன் என்னும் பிற்காலப் பல்லவ அரசன் காலக் கல்வெட்டொன்று, ஒக்கண்டநாகன் ஒக்கதின்தன் பட்டி போத்தன் என்பான் கொற்றவைக்கு நவகண்டமும், தலைப்பலியும் கொடுத்தான் எனக் கூறுகிறது. (S.I.I. vol.12; No: 106). கொற்றவைக்குத் தலைப் பலியிடும் வழக்கம் சோழர் காலத்திலும் இருந்ததைக் கலிங்கத்துப் பரணியில் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் தமிழகத்தில் கொற்றவை வழிபாடு சங்க காலத்திலிருந்தே சிறந்திருந்ததென்பதும், சிலப்பதிகார காலத்தில் இவ்விறைவி உமையவளின் ஓர் அம்சமாகவும், திருமாலின் தங்கையாகவும் கருதப் பட்டாள் என்பதும் நன்கு விளங்கும். இக்குமரிக் கொற்றவைக்குத் தனிக்கோயில் அமைக்கும் வழக்கமும் பண்டுதொட்டே இருந்ததென்பதும் இலக்கியங்கள் வாயிலாக அறியப்படும் செய்தியாகும்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)

பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

பல்லவை செங்கதி ரோனைப்
பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் றென்புக லூரரன்
பாற்றுய்ய செம்பொன் கொள்ள
வல்லவ னாட்டியத் தான்குடி
மாணிக்க வண்ண னுக்கு
நல்லவன் றன்பதி நாவலூ
ராகின்ற நன்னகரே. (57)

(இ-ள்): சூரியனது வாயிற் பற்களை நெரித்த சிவபிரான் திருவடிகளைப் புகழ்கின்ற சொல்லை யுடையவரும்; தெற்கின்கண்ணுள்ள திருப் புகலூரரிடத்து அன்பினால் தூய்மையான சிவந்த பொன்னைப் பெற்றுக் கொள்ள வல்ல வரும்; திருநாட்டியத்தான்குடியில் வீற்றி ருந்தருளும் மாணிக்க வண்ணருக்கு நல்ல வரும் ஆகிய நம்பியாரூரரது ஊர் யாதெனில்; திருநாவலூரென்னும் திருப்பதி. (எ-று) ஏ-அசை.

அவை பகுதிப் பொருள் விகுதி; ஐயுருபு பிரித்துக் கூட்டப்பட்டது.

கணம்புல்ல நாயனுர்

நன்னக ராய விருக்குவே
ளூர் தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை
புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற்
புல்லால் விளக்கெரித்தான்
கன்னவி ரேளெந்தை தந்தை
பிரானெங்க ணம்புல்லனே. (58)

(இ-ள்): நல்ல நகரமாகிய இருக்குவேளூரில் அவதரித்துப் பின் வறுமை யடைந்து; திருமகள் உறையுளாகிய நல்ல திருத்தில்லை யின்கண் சென்று; திருப்புலீச்சரத்தில் வீற்றிருக்கும் முதல்வராகிய சிவபிரானுக்கு; நல்ல கணம் புல்லினல் விளக்கேற்றினர் யாரெனில்; திரண்ட கற்போலும் தோள்களை யுடைய என் பிதாவுக்கும் தாதை தாதைக்கும் முதல்வராகிய எங்கள் கணம்புல்ல நாயனுர் (எ-று) ஏ-அசை.

காரிநாயனுர்

புல்லன வாகா வகையுல
கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச்
சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங்
கயிலைபுக் கானென்பராற்
கல்லின மாமதில் சூழ்கட
வூரினிற் காரியையே. (59)

(இ-ள்): மணித்திரள்கள் அழுத்திய பெரிய மதில் சூழ்ந்த; திருக்கடவூரில் வாழ்ந்த காரி நாயனுரை தான் செய்யும் நூல்கள் உலகத்து அற்பமாகாவண்ணம் சொற்பொருளமைந்த அந்நூலையும் அந்நூல் அரங்கேற்றுழிச் சொல்லும் உரையையும் அவையினுள் ளார்க்கு நயப்புடையனவாகச் செய்து; ஒளி வீசுகின்ற மேருவாகிய ஒப்பற்ற வில்லை யுடைய சிவபிரானைத் துதித்து; விளக்கமான திருக்கயிலையை அடைந்தாரென்று அறிஞர் கூறுவர் (எ-று). ஆல், ஏ-அசை.

நின்றசீர் நெடுமாற நாயனுர்

கார்த்தண் முகிற்கைக்
கடற்கா ழியர்பெரு மாற்கெதிரா
யார்த்த வமண ரழிந்தது
கண்டுமற் றங்கவரைக்
கூர்த்த கழுவி னுதிவைத்த
பஞ்சவ னென்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி
யில் வென்ற மாறனுக்கே. (60)

(இ-ள்): கரிய தட்பமான மேகம் போலும் வண்மைதங்கிய கையையுடைய; கடல் சூழ்ந்த காழி நாட்டாருக்கு முதல்வராகிய ஆளுடைய பிள்ளையாருக்கு எதிராய்; வாது கூறிய சமணர்கள் தோற்றதைக் கண்டு; அம் மதுரையில் அச் சமணர்களைக் கழுநுதியில்

ஏற்றிய பாண்டியனென்று; கூறும் புகழானது முன்னாளில் திருநெல்வேலியில் வந்தெதிர்த்த மாற்றாரை வெற்றி கொண்ட நின்றசீர் நெடுமாற நாயனருடையது. (எ-று)

மற்று-ஏ-அசை.

வாயிலார் நாயனர்

மாறு வருளரன் றன்னை
மனவா லயத்திருத்தி
யாறு வறிவா மொளிவிளக்
கேற்றி யகமலராம்
வீறு மலரளித் தன்பெனு
மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறுர் மயிலையுள் வாயிலா
னென்று விளம்புவரே. (61)

(இ-ள்): தம்முயிருள் நீங்காத திருவருளை யுடைய சிவபிரானை; மனமாகிய திருக்கோயிலுள் தாபனம் செய்து; தணியாத உணர்வென்கின்ற ஒளியையுடைய திருவிளக்கேற்றி அகமலரென்று சொல்லும் பெருமையுடைய ஆன்ம புட்பங்களைச் சாத்தி; பேரன்பென்னும் மெய்ம்மையான திருவமுதை நிவேதித்தருளினர் யாரெனில்; பெருமை நிறைந்த திருமயிலாப்பூரில் அவதரித்த; வாயிலார் நாயனரென்று அறிஞர்கள் கூறுவர். (எ-று) ஏ-அசை.

மல்லிகை முதலிய புறமலராகிய அட்ட புட்பத்திற்கு வேருதலின் அகமலரென்றும் அவை கொல்லாமை இந்திரிய நிக்கிரகம் முதலிய விசேட குணங்களெட்டாதலின் வீறு மலரென்றுங்கூறினர்.

முனையடுவார் நாயனர்

என்று விளம்புவர் நீடு
ரதிபன் முனையடுவோ
னென்று மமரு ளழிந்தவர்க்
காக்கூலி யேற்றெறிந்து
வென்ற பெருஞ்செல்வ மெல்லாங்
கனகநன் மேருவென்னுங்
குன்றம் வளைத்த சிலையான்
றமர்க்குக் கொடுத்தனனே. (62)

(இ-ள்): திருநீடூரின்கண் அவதரித்த முதல்வராகிய முனையடுவார் நாயனரை; எந்நாளும் போரில் தோற்றவர்களுக்காகக் கூலி வாங்கிக் கொண்டு; அவர் மாற்றாரைக் கொன்று வெற்றிகொண்டு அதனல் வந்த செல்வம் முழுதையும்; பொன் மயமாகிய நல்ல மேருவென்னும் மலையை; வில்லாக வளைத்த சிவபிரானது அடியார்க்குக் கொடுத்தவரென்று அறிஞர்கள் கூறுவர். (எ-று). ஏ-அசை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக்
குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி
நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் றிருமுரு கன்பூண்
டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட
னுகின்ற மாதவனே. (63)

(இ-ள்) முதலையுண்ட பிள்ளைக்கு உயிரைக் கொடுத்தவரும்; அதற்காகத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் மதுரமமைந்த திருப்பதிகம் பாடியருளினவரும்; திருமுருகன் பூண்டியில் தம்மைச் சூழ்ந்த வேடர்களைக் கெடுத்த வரும்; மேலான ஞானனந்த வமுதைப் பருகினவரும் யாரெனில்; வன்றொண்டரென்னும் பெரிய தவத்தை யுடையோரென்று அறிஞர்கள் கூறுவர். (எ-று) ஏ-அசை.

கழற்சிங்க நாயனர்

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக்
காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன்
மூக்கை யரியப் பொற்கை
காதிவைத் தன்றோ வரிவதென்
றுங்கவள் கைதடிந்தா
னுதமொய்த் தார்வண்டு கிண்டுபைங்
கோதைக் கழற் சிங்கனே. (64)

(இ-ள்): பெரிய தவமுடையார்களது வைப்பும் திருவாரூரின் கண்ணுள்ள சிந்தாமணியுமாகிய சிவபிரானுக்குத் திருப்பள்ளித்தாமம் அமைக்கும்படி வைத்திருந்த மலரைத் தானெடுத்து மோந்த தன் மனையாளது மூக்கைச் செருத்துணை நாயனர் அரிய அதனைக்கண்டு; மலரெடுத்த அழகிய கையை வெட்டியன்றோ மூக்கரியத் தக்கதென்று அவ்விடத்து அவள் கையை வெட்டினர். அவர் யாரெனில்; ஒலியோடு வீழ்ந்து ஆரவாரிக்கும் வண்டுகள் கொழுதுகின்ற பசிய மாலையை அணிந்த கழற்சிங்க நாயனர். (எ-று)

ஏ-அசை. வைப்பு-ஆபத்துக்கு உதவும்படி சேமித்து வைத்த நிதி.




நூல்: வானொலியில் அடிகளார்

ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்

விலை : ரூபாய் 6/-

வெளியிட்டோர் : கலைவாணி புத்தகாலயம்
3, சுந்தரம் ஐயர் தெரு,
தியாகராயநகர்,
சென்னை-17.

மதிப்புரை : திரு. டி. என். சுகி. சுப்பிரமணியம்

"ஓசை ஒலி யெலாம் ஆனாய்" என்பது ஆன்மீக அரசர் அப்பரடிகள் இறைவனுக்குத் தரும் இதய வடிவம்.

"ஓசை தரும் இன்பம் உவமை இலா இன்பம்" என்பது பண்ணெழுகும் பாடல் பாடிய பாரதியார் கண்ட கவி இன்பம்.

அழகு தமிழ் எழுத்தாளரும் பழகு தமிழ் அறிந்த பண்பாளரும் வானொலியில் ஆற்றிய பத்தொன்பது பேச்சின் வடிவம் இந்நூல்.

இக்கட்டுரைகள் அனைத்துள்ளும் சின்னஞ் சிறு மணிச் சொற்களின் நாதாந்த ஒலியைக் கேட்கிறோம்; சொல் அமைதியின் நடை, நாதக் கட்டுடன் அமைந்திருப்பதைச் சிலாரூபங் களாக அனுபவிக்கிறோம். அரசியல் பலாப் பழத்துள்ளே ஆன்மீகப் பழச்சுளைகளைப் பவுன் நிறத்தில் கண்டு பரவசமடைகிறோம்.

கடவுள் தங்க முடியும் இடம் கவிதையே என்பதனை அடிகளார் சொல்லும் அழகே தனி. அதன் ஓட்டமும் உறுதிப்பாடும் உளப்பாங்கும் இதோ:

இதயம், உணர்வில் பொங்கி வழியும்பொழுது, கவிதை பிறக்கிறது. அருவி உயர்ந்தது. அருவியிழிந்து வரும்மலை அதனினும் உயர்ந்தது; செஞ்சொற் கவிதை உயர்ந்தது. கவிதை பொழிந்திடும் கவிஞனின் நெஞ்சம் அதனினும் உயர்ந்தது. அவன் தரும் பாட்டினுள் கடவுள் தங்குகிறான். அதனாலன்றோ அவன் "அருச்சனை பாட்டேயாகும்" என்று சுந்தரரிடம் கூறினான்.

தமிழில் எல்லாம் வேண்டும்; தமிழர்க்கு எல்லாம் வேண்டும் என்ற பேச்சாளரை; புதுமையும் பொதுமையும் வேண்டுமெனும் பெற்றியாளரை, மடங்களுக்கு மக்கள் வருதல் வேண்டும் என்னாது, மக்களிடம் மடாதிபதிகள் வருதல் வேண்டும் என்னும் புரட்சியாளரை இத்தொகுப்பு முழுமையும் பார்க்கிறோம். படித்து இன்புறுகிறோம். நெஞ்சம் நெகிழ்ந்து "நிமலா" என்று கூவுகின்றோம்.

அன்புடைமை இந்நூலின் ஆதாரசுருதி. கருத்துக்களை, கனிர் என்று சொல்வதிலும் கனிவோடு சொல்வதிலும், எச்செயலும் எவ்வெண்ணமும் சமூக-சமய வளர்ச்சிக்குச் சார்ந்து நிற்றல் வேண்டும் என்பதிலும் அசை யாத நம்பிக்கை அனைத்துக் கட்டுரைகளிலும் காணப்படும் சிறப்பு. ஒலித்த கட்டுரைகளில் தமிழின் ஒளியும் தமிழின் எக்களிப்பும் விரவி வருகின்றன.

இத்தொகுப்பில் இடம் பெற்ற கட்டுரைகள் அன்புடைமை தொடக்கம்-குறையும் நிறையும் உள்பட அத்தனையும் நம்மைத் தழுவிக் கொள்ளும் தகைமை படைத்தவை. எந்தக் கட்டுரையையும் படித்து முடித்த பின்பு அதனை விட்டுப் பிரிய மனம் இல்லாமல் தவிக்கிறோம்.

அடிகளாரின் உவமான உபமேயங்கள், அப்பரடிகள்பால் அவர்களுக்குள்ள ஈடுபாடு, சொற்களின் துள்ளல் நடை மீண்டும் படிக்கத் தூண்டுகின்றன. சமயச் சார்பும் சமுதாயச் சார்பும் விஞ்ஞானமுறையில் அணுகிப் பார்க்

கும் திறனய்வுக்குள் மூடிவைக்கப்பட்டுள்ள கொற்கை முத்துக்கள்.

சிவதத்துவம், ஜீவதத்துவம், மனேதத்துவம், சமூக தத்துவம் ஆகிய தத்துவ தரிசனங்களை இந்நூல் முழுமையும் படித்துச் சுவைத்து இன்புற முடிவது அடிகளாருக்குள்ள ஆன்மீகப் பற்ருே, ஆழ்ந்த தமிழ்ப் பற்ருே மட்டும் காரணமாகா.

தமிழர்களின் வாழ்வும் வாக்கும் வளம்பெற வேண்டுமென்ற சமுதாயப் பற்றுதல்தான் நூலுக்குச் சிறப்பைத் தருகிறது. சொற் சுகம்-பொருட் சுகம்-சிந்தனைச் சுகம் போன்ற சுகானந்த வாரிதியில் நம்மைத் திளைக்கச் செய்கிறது.

கற்றறிந்த அடிகளார் தாமின்புறுவதைத் தமிழ் உலகு இன்புறக் காட்டுகிருர்கள். இதுவே இந்நூலின் குறிக்கோள்; இதுவே இந்நூலின் உட்பொருள். சிந்தனை வாழ்க்கை வாழும் செயல்திறத்தால், மக்களோடு ஊர் தோறும் உலவும் அவர்களது உள்ளம் நம்மையும் அவ்வாறு சிந்திக்க, உழைக்க, உயர உயரப் பறக்க அழைக்கிறது.

பக்தர்களுக்கும், பண்டிதர்களுக்கும், பாமரர்களுக்கும், பகுத்தறிவுவாதிகளுக்கும் படைக்கப்பட்ட படையல் சுவையும் சொல்லும் புதியவை. பக்திப் பசிக்குரிய பழவகைகள்; ஞானவழிக்குரிய கைவிளக்குகள்.

சமயக் கருத்துக்கள், பாடல்கள் யாவும் தாமரையிலிருந்து எடுக்கப்பட்ட தேன் சந்தன மரத்தில் தேன்கூடு வைக்கப்பட்டது போன்ற மணத்தையும் வலிமையையும் இந்நூல் தருகின்றது.

அடிகளார் கருத்துக்களை, காற்ருேடு காற்ருகப் போக விடாமல் கற்ருேர் நெஞ்சங்களில் புகுந்து கலந்து பரிமளிக்குமாப்போல, மல்லிகை மாலையாகக் கட்டித்தந்த பதிப்பாளர் திரு. சீனி. திருநாவுக்கரசை நாம் பாராட்ட வேண்டும்.

### அந்த நன்ஞள்..........!

ஊர்களைச் சாலைகள் இணைத்து வெற்றி பெற்றுவிட்டன. அண்டங்களை வானவெளிச்சாலைகள் இணைத்து வெற்றி பெற்றுவிட்டன. ஆனல், மனித உள்ளங்களை இணைக்கக் கண்ட நன்மை பெருகு அருள்நெறி நாட்டில் வளரவில்லை. நாட்டு மக்களின் நெஞ்சங்கள் அருள்நெறிவழி இணைக்கப்பெறவில்லை. மனித உள்ளங்கள் அருள்நெறி வழி இணைக்கப் பெறும்பொழுது மண்ணகம் விண்ணகமாகும்; அப்போது வான்முகில் வழாது பெய்யும்; மலிவளம் சுரக்கும்: குறைவிலாது உயிர்கள் வாழும். நாட்டில் நல்லரசு நிலவும்; அறநெறிகள் வளரும்; தவநெறி தழைக்கும்; நீதி நிலைபெறும்; சைவம் நின்று நிலவும். அந்த நன்னாளை எண்ணிப் பிரார்த்தனை செய்வோம்.

தவத்திரு, குன்றக்குடி அடிகளார்

திருச்சிற்றம்பலம்

# ‘பாலவடியும் பாடல்’

முதுபெரும் புலவர் ச. தண்டபாணிதேசிகர்

திருஞானசம்பந்தப் பெருமான் ஞானப்பால் உண்டு அருள்நலங் கனிந்து அருளிச்செய்த முதற்பதிகம் ‘தோடுடைய செவியன்’ முதலாகிய பத்துப் பாடல்களும் ஆம்.

சிவஞானத்தின்னமுதம் குழைத்த திருமுலைப் பால் உண்ட அளவிலேயே பண்டையுணர்வோடு பரமன் அருளுங்கலக்க மூன்றேயாண்டு நிறைந்த பிள்ளையார் பிஞ்சு முதிர்ந்து கனியானாற் போலப் பேரறிவு பெற்றுக், காதலி தன்வயமற்று மனத்தையும் பறிகொடுத்த நிலையை எய்தி, தன்றலைவனுடைய இன்றியமையாமையை எண்ணியெண்ணி அவனுடைய அணி, ஊர்தி முதலிய சிறப்பியல்புகளைக் கூறி வியந்த தன்மையைப் பெற்றுப் பாடிய பதிகம் இது.

அழுகின்ற குழந்தை முன்னறி தெய்வமாகிய அம்மையையும், அப்பனையுந்தான் விளிக்கும். அதுபோலப் பிள்ளையாரும் ‘அம்மே அப்பா’ என அழைத்தார். பொதுநிலையில் அச்சொற்கள்–உடற்றந்தையாரைக் குறிப்பது. இவர் பண்டை ‘நற்றவத்தால் பரமனருளால் தோன்றியவராதலானும் சிவஞானப் பாலுண்டு உணர்வரிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவராதலானும் திருத்தோணிச் சிகரம் பார்த்து. இச்சொற்களின் சி:வ எழுத்துக்களின் வடிவான திருவருளையும், அதனை என்றும் நீங்காது விளங்கும் சிவபரம் பொருளையுமே கருதுவதாக எண்ணி அழுதார்.

சொல், சொல்லுவான் கருதிய பொருளையே சென்று பற்றுந் தன்மையதாதலின் அம்மையப்பர் திருச்செவியில்சென்றடைந்தது. அவரை விடைமீது எழுந்தருளிவரச் செய்தது, அடையப்படு பொருளாகிய சிவம் அடையும் பொருளாக வந்தது; அருள் சுரந்தது. அந்த அருள் அனுபவத்தால் வந்த அற்புதப் பதிகம் இது.

இப்பதிகத்தின் முதற்பாடல் ‘தோடுடைய செவியன்’, என்பது. இது உள்ளங்கலந்த உவகைக் குறிப்பை வெளிப்படுத்துவது.

இது “இட்டான் அறிந்திலன் ஏற்றாளும் அறிந்திலாள்’ என்ற அகஉணர்வு போல, இறைவன் அன்பரறியாதிருக்கச் செய்தே அதாவது தன்வசமற்றுச் சிவபரமானபோது அவருடைமையைக் கவர்ந்து ஆட்கொண்ட அருமையை விளக்குவது.

பருவம் பெற்ற கன்னி உள்ளத்தாற்றலைவனைப் புணர்ந்து உரைக்கும் உரை யாவும் அவனைப் பற்றியே இருத்தலை அறிந்த தாய், உன்னையிங்ஙனம் மனந்திரித்த மாண்புடையான் யார் என வினவ, தலைவி அவனிலையும்‘ இயல்பும், இடமுங் கூறுவதாக வந்த துறைப் பாடல் இது. தலைவி கூற்று.

பொழிப்புரை: தோடு அணிந்த, காதினை உடையவனும், இடபவாகனத்தை ஏறி நடத்துபவனும், ஒன்றான தூயநிறம் பொருந்திய ஒரு கீற்றுப் பிறையைத் திருமுடியிற் சூடியவனும் காடான சுடலையின்கண் உள்ள நீற்றுப் பொடியைப் பூசியவனும் ஆகிய இறைவனே என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வனுவான். இதழ்களையுடைய தாமரை முதலிய மலர்களைக் கொண்டு பிரமன் முன்னொரு காலத்து வழிபட்டுத் துதிக்க, அவர்க்கு அருள் வழங்கிய பெருமையினையுடைய பிரமாபுரம் என்னுந் திருத்தலத்து எழுந்தருளியுள்ள பெருமான் இவன் அன்றே என்றவாறு.

சிறப்புக் குறிப்பு: அம்மையப்பரே யுலகுக்கு அம்மையப்பர் என்ற சைவத்தின் தொன்மை மரபை விளக்க வந்த பெருமானாதலின் இங்ஙனம் ‘தோடுடைய செவியன்’ எனக் கால் கொள்கிறார். ஏடு-இதழ். பீடு-பெருமை. செவியன், விடையேறி, மதிசூடி, பொடிபூசி, என் உள்ளங் கவர்கள்வன். இவன் பிரமாபுரமேவிய பெம்மான் அன்றே என வினை முடித்துக் காண்க.

நுகர்பொருள்: பிள்ளைப் பெருமானுடைய அழுகுரல் சென்று பரந்து திருமுலைப்பால் அருள ஆணைதரச் செய்தது இறைவனுடைய செவியாதலின் ‘செவியன்’ எனச் செவியை முன்னிட்டு உடையானை முற் கூறினார்.

அச்செவி ஆண்பாலர் அணிதற்குரிய குண்டலத்தை அணியாது தோட்டை அணிந்துள்ளமை பிள்ளையாருடைய உள்ளக் கிழியில் உருவாகத் தோன்ற அதனால் அமுதம் ஈந்து அறிவுப்பசியைத் தணித்த அம்மையின் நினைவு மீதூர அதனால் ஒரு மேனியிலேயே அருளும்-அதனையுடையவனுமாகிய தன்மைத் தோன்றத் ‘தோடுடைய செவியன்’ என்றருளினார்.

தோடு அணிந்தது உமையம்மையுள்ள ஒரு பாதியாதலின், அதனைத் 'தோடுடைய செவியன்' எனப் பெண்பாலொடு படுத்துக் கூருது செவியன் என்றது இருவர் மேனியும் ஒரு மேனியாய் அருள் வழங்குங் குறிக்கோளுடன் அமைந்திருக்கும் குறிப்பாம்.

அன்றியும், குருவின் வாயிலாகவே கடவுளை யடைதலும், அனுபவித்தலும் போலே தாய்வழி யாகவே தந்தையை யடைதல் வழக்க மாதலான் தாயின் பகுதியாகிய இடதுபாகச் செவியை நினைவுகூர்ந்து, அதிலே தன் வேண்டுதலை ஏற்பித்து, அதன் வழியாகச் சிவத்திருவருளைப் பெற்ற நன்றியைக் குறிப்பது மாம்.

'பல்லுயிருங் களிகூரத்
தம்பாடல் பரமர்பால்
செல்லுமுறை பெறுவதற்குத்
திருச்செவியைச்-சிறப்பித்து'

என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கும் இக் கருத்தை தெளிவுறுத்துவதாகும்.

'விடையேறி' விடையென்பது இடபம்: அது அற-வடிவமானது; வெண்ணிறமானது; உயிர்களுக்கு உழைப்பானெய்தும், ஊதியத்தில் சிறந்ததைப் பிறர்க்கு உதவி வைக்கோலாகிய இழிந்ததைத் தானேற்பது. அமைதியும் வீரமும் செறிந்தது. அதனை ஊர்தியாகக் கொண்டவன் இறைவன். எனவே அவ்விடபம் பெருமானைச் சுமக்கும் புண்ணியத்தை மட்டும் தானேற்று, அவன் செயும் அருளனைத்தையும் நமக்கே வழங்கும் இயல்பினது என்றவாரும்.

முன்னர்த் 'தோடுடைய செவியன்' என்பதால் தன் உள்ளத்தைக் கவர்ந்த கள்வனுகிய இறைவனுடைய பாகம் பிரியாப் பெண்ணை யுடைய தன்மையைப் பேசி, ஒரு பெண்ணை உடன் வைத்திருப்பவனே, அவளையும் வஞ்சித்து என்னையுங் கவர்ந்தான். இங்ஙனம் பெண் உள்ளங்கவருவதே அவனுக்குப் பெரும் போக்காயிற்று என்றும் கருதினுளாம்.

களவாட வருவான் ஊர்தியில் ஏறி வருவானு? இவன் ஊர்தியில் வந்தான். ஊர்தியோ களவாகிய தகாச்செயற்கு உடந்தை யாகாத அறவடிவாயது. அதனை யூர்ந்து வந்து களவாடின கருத்து புதன் மறைந்து புட் சிமிழ்ப்பவன் போல அறவூர்தியில் வந்து அறமல்லாத செயலைப் புரிந்து என்னைக் கவர்ந்தான் என்ருளாம்.

ஞான சம்பந்தப் பிள்ளையார், பால் அருந்தும் போது கண்ட காட்சி அம்மையப்பராக விடையேறி வந்த கோலமாதலின் அதனை அருளினுர் என்பது.

அடுத்து, தலைக்கோலத்தைச் சொல்லித் தாய்க்குத் தலைவனை அடையாளங் காட்டுகிருள் தலைவி 'ஓர் தூவெண் மதிசூடி' என்று.

'பால் கொடுத்தார் யார்' என்ற தந்தைக்கு, எனக்குப் பாலருளினுன், ஆணுருவோடு பெண்ணுருவாயினுன்; விடையேற என்று உருவமும் ஊர்தியும் உணர்த்திய பிள்ளையார் தலைக்கோலமுங் கூறி அடையாளங் காட்டுவார்போல இறைவனுடைய குற்றம் பொறுக்குங் குணத்தையும், குற்றமெலாம் போக்கிக் குணமெனக் கொண்டு கோதாட்டி வாழவைக்கும் பெருமைகளையும் குறிக்கின்ருர்.

'மதிசூடி' : பிறைமதியைச் சூடியவன்; மதியில் பிறைமதியும், நிறைமதியும் என இருவகையுண்டு நிறை மதியாகிய சந்திரன் தருக்குற்று மூத்த பிள்ளையின் திருவயிறும், முகமுங் கண்டு இகழ்ந்தானுக. மூதத பிள்ளையார் 'நீ நாடோறும் தேய்க எனச்' சாபந் தந்தார். சந்திரன் தேய்ந்து ஒருகலைப் பிறையாகிச் சிவபெருமானிடம் அடைக்கலம் புகுந்தான். அவன் வளரவும் வரம் பெற்று அழியா வாழ்வை எய்தவும், செய்ததோடு திருமுடியில் இடத்தையும் பெற்ருன். ஆகவே இறைவன் மதிசூடி ஆயினர்.

மதி, கடவுள் நிந்தனையும், பலதார மணமும், பிறர் மனை நயத்தலும் முதலான பல குற்றங்களையுடையனுயினும் தன்னைச் சரண் என்றடைந்த போது அத்தனை குற்றங்களையும் அகற்றி, யாரும் அறியாப் பதந்தந் தாண்டான். அது போலவே குற்றம் அகற்றி குணங் கொண்டு கோதாட்டி அருள் வழங்கும் ஆற்றலன் எம்மிறை என்பதை யுணர்த்த 'மதி சூடி' என்றருளியவாரும்.

மதியின் நிறம் வெண்மை. அதினும் தூய வெண்மை. மூத்த பிள்ளையார் சாபத் தீயாற் சுடப் பெற்று, இறைவன் அருளால் போற்றப் பெற்றமையின் நிறத்தான் மட்டுமன்று, மனம் மொழி மெய்களானும் தூயவனுயினன் என்பார் 'தூமதி' வெண்மதி என்று அருளுகிருர்.

தூவெண்மை என வெண்மைக்கு அடையாக்கி மிக்க வெண்மையான மதியென்பாரும் உளர். இறைவன் அணிந்துள்ளது ஒருகலைப் பிறையாதலின் களங்கம் முதலிய குற்றங்கள் இல்லாமையான் இங்ஙனம் கூறினர் என்பாரும் உளர். கடுகு சிறுத்தாலும் காரம் போகாதவாறு போலவும், பாம்பு சிறிதாயினும் அதன் நஞ்சு கொல்லாது விடாதவாறு போலவும், காஞ்சிரங்காய் கடுகளவாயினும் கசப்பொழியாதது போலவும் மதி பிறைமதியாக இருப்பதால் உடற்களங்கம் பருப்பொருட்டாய்த் தோன்ருதாயினும் கீற்றளவு பிறையிலும் கோட்டளவாகக் காணப்படுதலும், உயிர் களங்கமாகிய தீவினைப் பயன்கள் தன்னியல்பில் சிறிதும் திரியாமல் நிலத்தே இருத்தலுமாகிய இயல்புடையதாக

லானும் அக்குற்றங்கள் வெண்ணீறு சண்ணித்த இறைவனைச் சார்ந்த அளவிலே இயமஞ் சார்ந்த கருங்காக்கை பொன்னிறம் பெற்றாற் போல நிறத்தான் வெண்மையும், இயல்பாகவே குற்றங்களின் நீங்கிய இறைவனைச் சார்ந்த அளவிலே குணத்தாற் தூய்மையும் பெற்றான் என்பதே மிகச் சிறந்த சிந்தனையாதலைத் தெளியலாம்.

'சூடி' என்ற சொல்லாட்சி அப்பிறையும் இறைவற்கு ஓரணியாயிற்று என்ற நயந் தோன்ற அருளியவாறும். இதனை, மதியஞ் சூடுமாறு வல்லார் சுடரார் சடையில்' (2-ஆம்; திருமுறை; திருவழுந்தூர்-7) எனவும், 'கண்ணி தானுமோர் பிறையார்' 'தூமதிக்கண்ணி யணிந்து' (2ஆம் திருமுறை திருமறைக்காடு 3; 1ஆம் திருமுறை பாச்சிலாச்சிராமம் 4; எனவும் "செம்மலர்ப்பிறை" 1ஆம் திருமுறை, அச்சிறு பாக்கம் 4.) எனவும், 'சுடர்த்திங்கட் சூளாமணி (4ஆம் திருமுறை திருவதிகை:1) எனவும், 'இளந்திங்களங்கண்ணியான் (5ஆம்திரு முறை திருவன்னியூர்-9.) எனவும், 'திங்கட் குறுந் தெரியன் திகழ் கண்ணியன்' (7ஆம் திருமுறை கலயநல்லூர்-4.) எனவும் கண்ணியும் விடு பூவும் ஆயிற்று என்ற நயந்தோன்ற அருளிய வாறும்.

பூசும் சாந்தமும் என்மனம் கவர ஏது வாயிற்று என்பான் "காடுடைய சுடலைப் பொடி பூசி" என்று விண்ணப்பிக்கின்றார்.

சுடலை—செத்த உடலை நீருக்குமிடம். அங்கு ஒன்றுமே முளையாது. சுடுகாட்டுச் சாம்பர் எருவுக்காகுமா? என்பது பழமொழி ஆதலால் ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய தீ மாயையின் காரியமாகிய உடலைச்சுட அதனால் ஆய சாம்பர் பரந்த சுடுகாடு கள்ளியும் முள்ளியும் இண்டை யும் படர்ந்த தூறுகுமே யன்றிக் காடுடைய சுடலையாகாது. இறைவன் திருமேனியிற் பூசிக் கொள்ளுந் திருநீறு பேரூழிக்காலத்து இறைவனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து பரவிய சிவத்தீயால் விளைந்த நீறு ஆதலால் அவருடைய கண் தீயால் நீறிய இடம் காடு டைய சுடலையாயிற்று. அதனின்று விளைந்த நீறும் இறைவன் திருமேனிக்குப் பூசுஞ்சாந் தாகிப் பேரணி செய்தது. சிவந்த மேனியில் வெண்ணீறும் என்னுள்ளங் கவரத் துணை யாயிற்று என்கின்றாள்.

இதன் கருத்து பேரூழிக் காலத்து இயங்குவ நிற்பவான யாவையும் தத்தங் காரணத்துள் ஒடுங்க அவையனைத்தும் தூய நீருகி இறைவன் திருமேனியைச் சார்ந்து மீளவும் தோன்றாத் தகுதி எய்தும் என்பதாம்.

பெண்களுக்கே உரிய நிறையும் பொறையும் பொருந்தியவள் அடியேன் என்பாள் தற்சிறப்புத் தோன்ற என் உள்ளம் எனத் தன் இயல்பை விதக்கின்றாள். என் உள்ளம் என் வரைத் தாமே யன்றி யாரா கவரப்படாதது என்றாளாம். உ வடிவானது. கவரக் கூடா கவர்ந்தான் என்பாள்' உள்ள என்றாள்.

உள்ளங் கவர்தலாவது உள்ளம் உயிர்க் குணம் நீங்கி (சீவகுணம்) சிவத்தின் இயல் பிற்றாதல். ஆகவே 'பின்னையவன் றனக்கே பிச்சியானாள் தன்னை மறந்தாள்' என்ற நிலை விளைந்தமையைக் குறிப்பித்தாளாம்.

கள்வன்—உடையான் அறியாதே உடைமை யைக் கவருபவன். உள்ளம் உயிரின் உடைமை. உயிர்ப் பொருளாகிய யானறியா திருக்கச் செய்தே என் உள்ளத்தைக் கவர்ந்தானாதலின் 'அவன் கள்வன்' என்றாளாம். இதனைப் பின் வரும், கன்னியரைக் கவருங் கள்ளனே (3ஆ திருமுறை கழுமலம்:9) என்பன முதலிய பிள்ளை யார் திருவாக்குகள் நன்கு விளங்கும்.

உள்ளங்கவர் கள்வன் மேவிய இடம் பிரமாபுரம் ஆகிய சீகாழி எனத் தாய்க்குத் தெரிவிக்கின்றவள் பிரமன் வழிபட அவற்குச் சிவன் அருள் செய்த இடம் என்று அதன் வரலாற்றையும் பெயர்க் காரணத்தையும் பேசுகின்றாள். "ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்து ஏத்த அருள் செய்த பீடுடைய பிரமாபுரம்" என்று ஏடு—இதழ் ஏடுடைய மலர்-தாமரை மலர்கள் அனைத்திற்கும் இதழ் கள் உண்டாயினும் நூற்றுக்கு மேற்பட்ட இதழ்களாற் பொலிவது தாமரையே. ஆதலால் தாமரை சிறப்பானும் தலைமையானும் ஏடுடைய மலராயிற்று.

பிரமன் தான் செய்த சிவநிந்தையா லுண்டான பாவம் நீங்கவும், தன்முனைப் படங்கவும், படைப்புத்தொழில் கைவரவும் சிவபெருமானை வழிபட்டனன். அருள் பெற்றான். அத்தகைய சித்தித்தலம் இது என்றவாறு.

'பணிந்து ஏத்த' ஏத்துதல் மனம்மொழி மெய்களான் வழிபடுதல். பணிதல்-நாம் பெரியம் என்ற முனைப்படங்கல். பணித லுண்டான பின்பே ஏத்த இயலுமாதலின் பணிந்து ஏத்த எனக் காரணகாரிய முறைப் படியே அருளிவாறும். பின்னரும் சரியா நாவின் வேதகீதன், தாமரை நான்முகத்தன், பெரியான் பிரமன் பேணியாண்ட பிரமபுரம் என அருளுதல் காண்க. பீடு—பெருமை.

பெருமான் ஆண்டு எழுந்தருளிய வண்ணத்தை அறிவிக்கின்ருள் 'மேவிய பெம்மான்' என்று. மேவுதல்-விரும்பி எழுந்தருளுதல். ஏனைய இடங்களைக் காட்டிலும் இங்கு ஒரு வகைத் தனித்த விருப்போடு எழுந்தருளியுள்ளான்; ஆதலால் உள்ளம் கவர்கள்வனை என்றும் ஆண்டுக் காணலாம் கூடலாம் என அருமையும் எளிமையும் தோன்ற அறிவித்தாளாம். 'நம்பும் மேவும் நசையாகும்மே' என்பது தொல்காப்பியம். (சொல்-உயிரியல் 33.)

பெம்மான் என்பது பெருமான் என்றதன் திரிபு. கருமாளன் என்பது கம்மாளன் என்ருதல் போல.

ஒரு பொருளைக் கவர்ந்தவன் பொருளோடு விரைந்து கரக்க எண்ணுவான். இவனோ என் முன் நிற்கின்ருன் என்பாள் 'இவன் அன்றே' என்கிருள். இவன் இறைவன் என்று சுட்டிச் சொல்ல இயலாது எங்கு அறிவுருவாய் அனுபவப் புலனுய் விளங்கும் பரம்பொருளை இவன் அன்றே என வியந்து சுட்டிக் கூறினுள். இவள்மேல் வைத்த ஆதாரத்தால் இவளை ஆட்கொள்வோம் என்று கச்சை கட்டி முன் நிற்கின்ருன் ஆதலின்.

சிவநெறியாளர் சிந்தனை-:

திருமுறைச் செல்வராகிய கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் அவர்கள் பிரமாபுரம் எனவே பிரமன் வழிபட்ட தலம் என்பது விளங்குதலால், ஏடுடைய மலரான் பணிந்தேத்த என்பதற்கு, பூவால் வழிபட என்ற பொருளே பொருந்துவதாம் என்பர். மேலும் ஏறி,சூடி, பூசி என்பனவற்றை வினையெச்சமாகக் கொண்டு கவர்கள்வன் என்ற வினைத் தொகையின் நிலைமொழியோடு முடிப்பர் சிலர்' என்பர். அங்ஙனம் முடிப்பின் தோடுடைய செவியன் என்பது பெயராகவே கொள்ளக் கிடத்தலான் செவியன், ஏறி, சூடி, பூசி, உள்ளங்கவர் கள்வன் என்பன பெயராகவே கொண்டுரைப்பது சிறப்பாம்.

மற்றும் அவர்கள் 'விடையேறி' என்பது நித்தியத் தன்மையை வேண்டிய அறக் கடவுளை வெள் விடையாகப் படைத்து ஊர்தியாகக் கொண்டதால் சிருட்டியும் 'மதிசூடி' என்பது சந்திரனுக்கு அபயந்தந்து திருமுடியில் ஏற்றிக் காத்தலால் திதியும், பொடி பூசியென்பது சர்வசங்கார காலத்து நிகழ்ச்சியை அறிவித்தலால் சங்காரமும் கள்வன் என்பது எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்திருந்தும் அவைகள் வினை போகங்களை நுகர ஒளித்து நிற்பதால் திரோபவமும், அருள் செய்த என்பது அருள் செய்வன் என்ற அனுக்கிரகமும் ஆகிய ஐந்தொழில்களும் அறிய நிற்பன' என்பர்.

ஸ்ரீமத் செப்பரைச்சாமிகள் அவர்கள் தோடுடைய செவியன் முதலாயின இறைவனுடைய எண்குணங்களை உணர்த்துவன என்றும், பிரமாபுரமேவிய பெம்மான் என்பது அவன் ஊரையும், விடையேறி என்பது அவனது ஊர்தியையும் குறிப்பனவாகவே தசாங்கங்கள் குறிப்பிற் போந்தன என்றும் விடையேறி என்பது இறைவனுக்குள்ள உருவத் திருமேனியையும் 'பொடி பூசி' என்பது அருவுருவத் திருமேனியையும், உள்ளங்கவர் கள்வன் என்பது அருவத் திருமேனியையும் உணர்த்தின என்றும் உரைப்பார்கள்.

சேக்கிழார் சுவாமிகள் "மறை முதல் மெய்யுடன் எடுத்து எழுதுமறை" என்பதால் பிரணவத்தின் முதலாகிய 'ஓ' என்பதைச் சிவசத்தியின் உண்மை வடிவாகிய தகர வித்தையின் முதலெழுத்தோடு கூட்டித் 'தோ' எனத் தொடங்கியதாகக் குறிப்பிடுவார்கள். இக்கருத்தோடே பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்தும் 'நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்' என மகர ஈருக முடித்து 'ஓம்' என்பதை முற்றுப்பெறுவித்தலைப் பார்க்க ஆகவே திருமுறைகள் பன்னிரண்டும் பிரணவத்துள் அடங்கியன என்பதும்' முற்றுப் பெற்ற பிறகு பதின்மூன்ரும் திருமுறை பதினன்காந் திருமுறைகளாக எண்ணத் தகுவன ஒன்றும் இல்லை. உளதாகாது என்பதும் தெளிவாகப் புலப்படுதல் காண்க.

ஆகவே இளமையிலேயே எய்துதற்கு அரிய சிவஞானம் பெற்ற பிள்ளையார் முதிர்ந்த அன்பாகிய காதல் நெறியிலே நின்று தன்னைத் தலைவியாகக் கருதிப் பெருமானுடைய இயல்புகளையும் அவனிருக்கும் இடத்தையுங் கூறி அவனே என் உள்ளங்கவர் கள்வன், அவன் இவனன்றே எனச் சுட்டிக் காட்டி நம்மை உய்விக்க எழுந்த அருமைப் பாசுரம் இஃதென அறிக.

அம்மையப்பர் வழிபாடே தமிழ்நாட்டுத் தொன்மையான நெறி என்பதை எடுத்த எடுப்பிலேயே 'தோடுடைய செவியன்' எனக் கூறி 'ஒன்றவன் தானே இரண்டு அவன் இன்னருள்' என்ற உண்மையும் உணர்த்தி நிற்பதையறிந்து உய்யக்கடவேம் யாம்.

௨

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 7

இடம் : பரமதத்தன் வீடு

நேரம் : பகற்போது

உறுப்பினர் : புனிதவதி, மருதவாணர், பரமதத்தன்

மேடை—பரமதத்தன் வீடு-மாளிகையில்-இரண்டு அறை மட்டும் காட்சிக்குப் படுமாறு அமைக்கப்பட்டுள்ளது. ஒன்று உள் அறை, மற்றொன்று வெளியறை. தடுப்புச்சுவர் சிறிய சிறிய அளவாகப் பார்ப்பதற்கு மறைக்காத அளவில் உள்ளது.

காட்சி தொடங்கும்போது புனிதவதி அரிவாள்மனையில் காய்கறி அரிந்து கொண்டிருக்கிறாள்.

மருதவாணர் : (வெளியே இருந்து) அரகர சிவசிவ சம்போ மகாதேவா! சம்போ மகாதேவா! அம்மா தாயே!

புனித : யாரோ சிவனடியார் போலிருக்கிறதே...(போய் வரவேற்கிறாள்) வாருங்கள் சாமி! உள்ளே வாருங்கள்.

மருத : திருநீலகண்டன் திருவருளில் திளைப்பீராக. அம்மா! அப்பன் அருள் கிட்டுவதாக. தாயே! பசித்து வந்துள்ளேன். புசிப்பதற்கு ஏதாவது...

புனித : சாமி! காணும் பொருளெல்லாம் சிவமாகக் காணும் எமக்குப் பசித்து வந்த சிவனடியார்க்கு உணவூட்டுதலினும் வேறு பேறு உண்டோ? என் கணவர் ஈட்டும் பொருள் அனைத்தும் கூட்டும் செம்பொன்னும் நவநிதியும் செழுந்துகிலும் அரன் அடியார்க்கே ஆவன ஆகும். அரன் கழல் பணியும் எமக்கு அவன் திருவேடம்கொண்டு வந்துள்ள உமக்கு ஏற்பட்ட பசியைத் தணித்தலே மேலான அறம். ஆகவே உணவு படைக்கச் சித்தமாகிறேன், சாமி.

(காய்களை எடுத்துக் கொண்டு போய் உள்ளே வைத்து வருகிறாள்)

மருத : அம்மா! அடியேனுக்குப் பசித் தீ பலவாறு வாட்டுகிறதே...நீயோ இப்போது தானே காய் அரிந்த மாதிரி தெரிகிறது.

புனித : சாமி! அப்படிச் சொல்லப்படாது. காய்களை அரிந்துகொண்டுதான் இருந்தேன். அடுப்பிலே வேகவைத்து விட்டும் வந்துவிட்டேன். சீக்கிரம் வெந்து விடும். அதனால் உமக்கு உடனே உணவு படைத்துவிடுவேன். என்றாலும் பசி மிகுதியாக இருப்பதால் இளம் பசியாற மோரும் பழமும் தருவேன்.

மருத : எது இருந்தால் என்னம்மா? அடியேனுக்குப் பசி தணியவேண்டும்; அவ்வளவு தான்.

புனித : வாருங்கள்; அமருங்கள். சாமி, திருநீறு அளித்தருளுங்கள். (சிவனடியார் திருநீறளிக்க வாங்கி நெற்றியில் பூசிக் கொள்கிறாள், பின்பு உள்சென்று ஒரு மாம்பழத்தை அரிந்து கொண்டு வந்து வைக்கிறாள்). உண்டருள்க, சாமி!

மருத ; (உண்டு எழுந்து) அம்மா, தாயே! மிக நன்றாய் இருந்தது அம்மா, இந்த மாம்பழம்! நல்ல சுவை தந்தது.

புனித : மகிழ்ச்சி, பெரியோரே!

மருத : மிக்க மகிழ்ச்சி தாயே! என்னமோ இன்றைக்கு ஆண்டவன் இங்கே படி போட்டிருக்கிறான். வயிறு நிறைய உண்டேன். சிவத்தை வணங்குவார் அவத்தை வெல்வார். நீயும உன் கணவரும் எல்லாப்பேறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வீராக! போய் வருகிறேன்.

புனித : நில்லுங்கள் சாமி, இதோ வருகிறேன். (போய், ஒரு தட்டில் காசு, பழம், புதுத் துணி முதலியன வைத்துக் கொணர்ந்து கொடுக்கிருள்).

மருத : சிவ சிவ (பெற்றுக் கொள்கிருர் செல்கிருர்; புனிதவதி பரிகலன்களை எடுத்து உள்ளே கொண்டு போகிருள்.)

## காட்சி 8

இடம் : பரமதத்தன் வீடு
நேரம் : பகல்
உறுப்பினர் : புனிதவதி, பரமதத்தன்

பரம : புனிதவதி! புனிதவதி!

புனித : வாருங்கள், அன்பரே!

பரம : என்ன வெயில்!...கடையிலிருந்து வருவதற்குள் வெயில் தகித்து விட்டது. சமையல் ஆகிவிட்டதா? பசிக்கிறதே. கடையிலே இன்றைக்குக் கொஞ்சம் நல்ல வாணிகம். அதனலே வருவதற்கு நேரமாகிவிட்டது. என்ன புனிதவதி?

புனித : இன்றைக்கு வேலைக்காரியும் நன்ருக ஒத்துழைத்தாள். போய்க் கை காலைக் கழுவி சாமி கும்பிட்டுவிட்டு வாருங்கள். நான் அதற்குள் பரிமாறத் தொடங்கி விடுகிறேன்.

(விளக்கு அணைந்து விளக்கு ஒளிர்கிறது; மாம்பழம் கொண்டு வருகிருள்; சாப்பிட்டதற்கறி குறியாகக் கை துடைத்துக் கொண்டு வருகிருன் பரமதத்தன்).

பரம : ஓ...மாம்பழமா? ஆமாம் ஆமாம்...நான் அனுப்பினேனே. சேதி தெரியுமா புனிதவதி? நாம் எப்பவோ மாங்கன்று ஒன்றை ஒருவர்க்குக் கொடுத்தோமாம். அது பார், மரமாகிக் காய்த்துப் பழுத்துவிட்டதாம். முதலிலே நாம்தான் சாப்பிடணும் என்று இரண்டு பழத்தைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனுங்க. அதைத்தான் இங்கே அனுப்பினேன். அதுதானே இந்தப் பழம்?

புனித : ஆமாங்க...சாப்பிட்டுப் பாருங்க நல்லா இருக்கா என்று.

பரம : (சுவைத்து) ஆகா...நல்லா இருக்கே...புளிக்கலே...நார் இல்லே...என்ன இனிமையாக இருக்கிறது தெரியுமா? இந்த நீ ஒரு துண்டு தின்னுபாரு! உம்...தின்னு.

புனித : தேவலாம்; நீங்களே தின்னுங்க.

பரம : சரி...இவ்வளவு அருமையாக இருக்குமென்று நான் எதிர்பார்க்கவே இல்லையே. நல்லா இருக்கு. உண்மையிலேயே நிரம்ப நல்லா இருக்கு. நீ தின்னுபாரு... ஆ...இன்னென்று இருக்குமே இன்னெரு பழம்....நீயும் தின்னலாம். அதையும் கொண்டு வா...புனிதவதி! போய் எடுத்து வா அந்த பழத்தையும். போ...போய் எடுத்துவா...

புனித : அன்ப?...

பரம : அட, ஏன் தயங்குறே?...போ...போய் எடுத்துவா (தள்ளுகிருன்)

புனித : போகிறேனுங்க...(உள்ளறைக்குப் போகிருள். போய்த் தயங்கிக் கலங்கி) ஐயோ...இறைவா ; நான் என் செய்வேன்? சிவனடியார்க்கு உணவு படைக்கும் போது அந்த மாம்பழத்தை அரிந்து வைத்து விட்டேனே. உற்றுழி உதவும் உமையொரு பாகனே! நான் எப்படி அவரிடம் சொல்வேன்? முன்பே சொல்லாமல் இப்போது நான் சொன்னல் என்ன நினைப்பார்? ஆவலுடன் கேட்கும் அன்பர்க்கு, அடியார்க்குப் படைத்த செய்தியை உடன் சொல்லாது, சுவை மிகுதியால் அவர் செய்த ஆர்ப்பாட்டத்தால் தயங்கி நின்று விட்டேனே. என் தயக்கம் அன்பர்க்கு ஐயத்தை உண்டாக்கினல்? கடவுளே! கலங்கி நிற்கும் இக்காரிகைக்குக் கதி ஒன்று காண்பிக்காயோ? அன்பா! அருளாளா! (மாங்கனியொன்று அவள் கையில் விழுகிறது!) ஆ...மாம்பழம்! அதே போன்ற மாம்பழம்! சிந்தை மயக்கும் சிவபெருமானே ; உன் செயலை என்னென்பேன்.

(கொண்டு போய்க் கொடுக்கிருள்; அதைக் கடித்துச் சுவைக்கிருன் பரமதத்தன்)

பரம : ஆகா...மாம்பழம் என்ருல் இதுவன்ருே மாம்பழம்! இந்தா நீ கொஞ்சம் கடித்துத் தின்னுபாரு!

(தொடரும்)

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 5

இடம் : பெரியாழ்வார் வீடு

நேரம் : முன்னிரவு

உறுப்பினர் : கோதை, பெரியாழ்வார்

கோதை : அப்பா! நீங்கள் அடிக்கடி சொல்வீர்களே! அந்தக் கண்ணன் கபடக் கண்ணனா?

பெரியாழ்வார்: இல்லையம்மா? கோதை! மாலவன் உயிர்களுக்கு மருள் நீக்கி, வீடு பேறளித்தற்காகவே, மனித உருவுடன் தோன்றி, மனிதன் போலவே, கபட விளையாட்டால் அரியன செய்கின்றான். அவன் எடுத்த அவதாரமெல்லாம் அம்மா திரியே அமைந்தன, இதோ நானே பாமாலை பாடுகிறேனே, திருமால்மேல். அவனைக் குழந்தையாகவே பாவித்துத்தான் பாடுகிறேன்.

கோதை : ஏன் அப்படிக் குழந்தையாகப் பாடணும்?

பெரியாழ்வார்: அம்மா! குழந்தை! நம்மைப் படைத்து, அளித்து, அருளும் அந்தத் திருமால் பெரியோனே ஆயினும், குழந்தையாகப் பாவித்தால்தானே அவனை நாம் கொஞ்சிக் கொஞ்சிக் அன்பு செலுத்தலாம். குழந்தை வடிவாகவே நின்று உலகத்தைப் பாலிக்கிறான் அவன்.

கோதை : அப்பா! கோகுலத்திலே வளர்ந்த குழந்தை கண்ணன் ரொம்பக் குறும்புக் காரனாமே?

பெரியாழ்வார்: இல்லையம்மா! ரொம்பக் குறும்புக்காரனில்லே. குறும்புக்காரன் போலே நடித்தான்.

கோதை : என் தோழிகளெல்லாரும் அப்படித்தாம்பா சொல்றாங்க!

பெரியாழ்வார்: தோழிகளெல்லாம் அப்படியா சொல்றாங்க.

கோதை : உம்! தெருவிலே சிறுமிகளெல்லாம் மணலாலே வீடு கட்டி விளையாடினா அதையெல்லாம் காலாலே கலைச்சுடுவானாம். கும்மி அடிச்சா தானும் கும்மி அடிக்கிற மாதிரி அடிச்சு எல்லோருடைய முதுகிலும் அடிச்சுடுவானாம்.

பெரியாழ்வார்: உம்!

கோதை : வெண்ணெயைத் திருடுவானாம். 'ஏன், திருடினே?' என்றால் அவங்க வாயிலேயும் வெண்ணெயைத் திணிச்சுடுவானாம். யாசோதைகிட்டே புகார் சொல்ல வருகிற பெண்களுடைய சடையை எல்லாம் முடிஞ்சு விட்டுடுவானாம். என்ன குறும்பு!

பெரியாழ்வார்: இப்படியெல்லாம் விளையாடினான் கண்ணனாய் வந்த திருமால், கோதை! அவனை வணங்குகிற ஒவ்வொருவரும் அவனுடைய அருளைப் பெறுவார்கள்.

கோதை : அப்படின்னா எனக்கும் அருள்வானா அப்பா?

பெரியாழ்வார்: நிச்சயமாக அருள்வானம்மா.

## காட்சி 6

இடம் : தெரு

நேரம் : மாலே நேரம்

உறுப்பினர் : கோதை, சிறுமியர் மூவர், நம்பி, ரெங்கன்

கோதை : கண்ணு! கண்ணு! கருமைநிறக் கண்ணு! வந்துட்டியா விளேயாடலாமா? வா கண்ணு! [ஒருத்தி பின்னே வந்து கண்ணேப் பொத்த அவள் கையைப் பிடித்து முன்னே இழுக்கிருன்]

ஒருத்தி : என்னடி! இது, நான் கண்ணேப் பொத்தினுல் நீ கண்ணு! கண்ணு! என்கிறே: ஏ கோதை.

கோதை : ஆ! நீயா!

ஒருத்தி : சரிதாண்டி வாடி! விளேயாட்டையே மறந்துட்டியா? வா, எல்லாரும் வாங்கடி! கண்டுபிடிச்சு விளேயாடினது போதும்! இப்ப கும்மி அடிப்போண்டி!

[கும்மி அடித்தல்]

மற்ருெருத்தி : பாடுங்கடி! சும்மா அடிச்சா?

இன்ஞெருத்தி நான் பாடுறேன்டி!

மற்ருெருத்தி : பாடு!

இன்ஞெருத்தி கும்மியடிங்க, கும்மியடிங்க சிறுமிகளெல்லாம் சேர்ந்து கும்மியடிங்க!

கோதை : இது என்னடி பாட்டு. நாமெல்லாம் கும்மிதான் அடிக்கிருேமே.

இன்ஞெருத்தி அப்போ நீதான் பாடேன்.

கோதை : சரி அடிங்க [கண்ணன் மீது பாடுகிருள்]

கும்மி (2×2 தட்டு)

1. கும்மியடி தோழி கும்மியடி உள்ளம் கொஞ்சி மகிழ்ந்திடக் கும்மியடி
கோதைஎ னதுயிர்த் தோழிய ரேயந்தக் கோவிந்தன் பேர்பாடிக் கும்மியடி
2. வெண்ணெய்தி ருடிம கிழ்ந்தவ ஞம்தோழி வேதனே கண்டும கிழ்ந்தவனும்
கண்ணேக்கு ருடாக்கித் தோழிக்குப் பூச்சூட்டிக் காணுமல்
[எங்கோ மறைந்தவனும்
3. கோபியர் வீட்டில் மத்தடி யுண்டு வீணுக வம்பை வளர்ப்பவனும்
கோலங்கள் காட்டியக் கோபிய ரோடு கொஞ்சிம கிழ்ந்து
[மறைபவனும்
4. என்னத்தை உள்ளத்தில் வைத்தது மற்றவர் எப்படியும்
[அறியாதபடி
கின்னத்தைப் போலெழில் கன்னத்தில் முத்தங்கள் கேலியாக
[நூறு தந்தவனும்

நம்பி : [வந்து] ரெங்கா! பாருடா நம் கோதையின் பாட்டை!

ரெங்கன் : ரொம்ப நல்லா இருக்குடா கேட்க.

நம்பி : கேட்கறதுக்கு மட்டுமா?

ரெங்கன் : அவங்க ஆட்டத்தைப் பார்க்கறதுக்குந்தான்!

நம்பி : ஆகா! (மயங்கி கும்மி அடிக்க ஆரம்பிக்கிருன்; ரெங்கனும் சேர்ந்து கொள்கிருன். கோதையின் பாட்டு முடிந்ததும் அவர்களோடு சேர்ந்து இருவரும் கும்மி அடிக்கிருர்கள். கோதை நம்பி மீது மோத ஆட்டம் நிற்கிறது)

கோதை : நம்பி! ரெங்கா!

நம்பி : அம்மா! கோதை!

ரெங்கன் : அப்பா, அழைக்கிருரம்மா!

கோதை : வாங்க, போவோம்.

(தொடரும்)

# அப்பர் காட்டும் திருக்கோயில் சிறப்பு

மனித்தப் பிறவியின் தோற்ற வளர்ச்சியைக் குறிப்பிடும் ஆளுடை அடிகள் "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி" என்கிறார். மனித குலத்தில் எப்பொழுது, யாரிடம், எவ்வாறு 'தெய்வ சித்தம்' உண்டாயது என்று அறிய முயல்வது இயலாததாகும். ஆனால், அத் 'தெய்வ சித்தம்' உண்டாகியதன் பயன் அளப்பரியதாகும். அதன் பயனை மெய்ஞ்ஞான உலகில் மனிதகுலம் அடைந்துள்ள பயனும் சிறப்பும், விஞ்ஞான உலகில் அது, நிலவில் நடந்து பெற்றுள்ளதைக் காட்டிலும் மேலான தாகும். முனிவிலாததோர் பொருள் கருதத் தலைப்பட்ட தெய்வ சித்தத்தின் வளர்ச்சியும் விரிவும், சமய வாழ்க்கையும், சமய தத்துவங் களும் உருவாக ஏதுவாயின. அவ்வாறமைந்த சமய அடிப்படை, மனிதன் மனிதனாக வாழ் வதற்கான சூழலை வகுத்துத் தந்தது.

தமிழ் மக்கள் பல்லாயிரம் ஆண்டுக்கு முன்னரே தெய்வ சித்தம் வாய்க்கப்பெற்ற வர்களாய்ச் சமய உணர்வில் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்கள். தமிழ் மக்கள் வாழ்விலக்கணம் கூற எழுந்த தொல்காப்பியம், கருப்பொருள் விரிக்குமிடத்து "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை" எனத் தெய்வத்தை முதற்கண் சுட்டுவதும், "மாயோன் மேய காடுறை உலகமும்" என நிலப்பகுதியினைத் தெய்வத்தோடு இயைத்துக் கூறுவதும் இதனை விளக்கும். யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பது என்னும் கருத்தில் 'இறை' என்றும், யாவற்றையும் கடந்து விளங்குவது என்னும் கருத்தில் 'கடவுள்' என்றும் தமிழ் மக்கள் பரம்பொருளை தெய் வத்தைச் சுட்டியுள்ளது நுட்பமிக்கதாகும். மண்ணுலக இன்பத்திலும் வாழ்வினும் மேலாக நிலைத்த இன்பமும் அமைதியும் இறைநலம் பேணும் சமயவாழ்வில் உள்ளதாகவும் அதனை முயன்றடைவதே இம்மை வாழ்வின் குறிக் கோள் என்றும் கொண்டனர். மாந்தர்பால் அறிவு நிலையிலும் உணர்வு நிலையிலும் வேறுபாடுகள் மலிந்திருக்கக்கண்ட பழந்தமிழ்ச் சமயமாகிய சைவ நெறி, இறை இன்பக் குறிக்கோளை அடைய ஒரே வழியைக் கூறாமல், சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு நெறியை வகுத்துள்ளது. மனித இயற்கை அறிந்து இந்நால் நெறி போற்று வதால் இச்சைவநெறி இயற்கைச் சமயம் எனப் போற்றப்படுகிறது. இச்சிறப்பினை உணர்த்த விரும்பிய தாயுமானவர் இந்நால் நெறியும், கனிநுகர்வாகிய பயனுக்கு முற்படி களான, அரும்பு மலர் காய் கனி போன்றவை யாகும் என்ற கருத்தில்,

விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞான
நான்கும்
அரும்பு மலர் காய் கனி போல் அன்றோ
பராபரமே

என்றார்.

தமிழகத்தில் வேற்றுச் சமயங்கள் செல்வாக் குற்றுத் தமிழ்ச்சமயங்கள் தாழ்வுற்ற நிலையில் அவற்றை வாழ்விக்கத் தோன்றிய நாயன்மார் களும் ஆழ்வார்களும் மக்கள் அனைவரும் எளிதில் உணர்ந்து உய்தி பெறுதற்குச் சரியை கிரியை நெறிகள் அடங்கிய பக்தி நெறியினை வளர்ப்பாராயினர். எங்கும் நிறைந்து, யாவற் றையும் கடந்து விளங்கும் பரம்பொருளை அறிவாற்றலில் எளியராயுள்ளவர்களும் நன்குணர உருவவழிபாடும் அதற்கான கோவிலமைப்பும் இன்றியமையாதனவாயின. இதனால் பக்தி நெறி பேணிய நாயன்மார்கள் முதலானோர் பரம்பொருளின் உருவத்திருமேனி விளக்கத்திலும், அவை கோயில் கொண்ட ஆல யங்கள் ஊர்கள் ஆகியவற்றின் வருணனையிலும் பெரிதும் ஈடுபட்டனர். சங்கப் புலவரான நக்கீரரும்,

"காடும் காவும் கவின் பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறு பல்வைப்பும்"

"சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்"

"மன்றமும் பொதியிலும் கந்துடை
[நிலையிலும்"

பரம்பொருள் உறைவதாகக் காட்டினாலும்

"அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே"

என்றும்,

"ஆவினன்குடி அசைவும் உரியன்"

என்றும்,

"ஏரகத் துறைதலும் உரியன்"

என்றும் பிறவாறும் கூறுவாருயினர். இவ் வகையில் சமய வாழ்விற்குக் கோயில்கள் மிக

டாக்டர். அ. மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,

மிக இன்றியமையாதனவாகி விட்டன. சைவ சமயகுரவர் நால்வருள் ஒருவராய அப்பர் பெருமான் தன் தோத்திரப் பாடல்களில் கோயில்களின்– ஆலயங்களின் சிறப்பினைப் பலவாறாக வற்புறுத்தியுள்ளார். இத் தோத்திரங்களினின்றும் உருவாகிய சைவ சாத்திரங்களும் திருக்கோயில்களின் சிறப்பினை எடுத்துக் காட்டியுள்ளன.

அதிகையில் சூலை நீக்கி இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற பின்னர் கையில் திகழும் உழவாரமுடன், கைத்தொண்டு உவந்து புரியத் தொடங்கிய திருநாவுக்கரசர் சிவபெருமான் வீற்றிருக்கும் பதிகள்தோறும் சென்று, 'பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை, சாத்தி, ஏத்தலாயினர். காழிச் செல்வரின் அருளால் ஞானப்பாலுண்டு, திருப் பெருகு சிவஞானம் முதலிய அனைத்து ஞானங்களையும் அந்நிலையே பெற்ற சம்பந்தரும் இவ்வாறே பண்ணொடு தமிழ் பாடித் தலந்தோறும் இறைவனைப் பரவும் நெறியினை மேற்கொண்டார். புறச் சமயங்களான சமண புத்த செல்வாக்கு மிக்குத் தமிழ்ச் சமயமாகிய சைவம் வீழ்ச்சியுற்ற நிலையில், அதனை மீண்டும் நிலைநிறுத்தத் தோன்றிய இவ்விரு அருட் குரவர்களும் சைவ சமய மறுமலர்ச்சிக்குத் தமிழ்ப்பாக்களை இசைத்துப் பரவும் "பதிக நெறியினை"யே ஏற்ற கருவியாகக் கொண்டனர். கொல்லாமை முதலிய அறம் பேசி மன்னர்களையும் மக்களையும் கவர்ந்து ஆட்படுத்திய சமண சமய மயக்கத்திலிருந்து அவர்களை மீட்கவேண்டிய பொறுப்பில் இவ்விருவரும் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர். சமண இருளகற்றிச் சைவ ஒளி பரப்ப இவர்கள் தொடங்கிய பக்தி விளக்கிற்குப் பண்ணும் தமிழும் நெய்யும் திரியுமாகத் திகழ்ந்தன.

தெய்வத்தை உடன்படாத சமண சமயச் செல்வாக்கினால், சிற்றூர்களிலும் பேரூர்களிலும் விளங்கிய சிறிய-பெரிய கோவில்கள் பலவும் பேணுதல் குறைந்து, புறக்கணிக்கும் நிலை அடைந்தன. சிற்றூர்-பேரூர் அல்லது நகரங்களின் சமுதாய நல மையங்களாகத் திகழ்ந்த கோயில்களும், அதன் அடிப்படையிலமைந்த சமய வாழ்க்கையும் சீர்குலையலாயின. இச் சிதைவிலிருந்து, தமிழகத்தை தமிழகச் சமய வாழ்க்கையை மீட்கும் பொறுப்பினை அவ்விருவரும் ஏற்றனர். அதனால் எங்கும் நிறைந்த ஈசனை, ஓரிடத்தில் ஒரு வடிவில் வைத்துக் காண வேண்டாது,

"நன்று நன்மனம் வைத்திடு ஞானமாம்
ஒன்றுனைக்கண்டு கொண்டதென்
[னுள்ளமே"

என்றும்,

"நேசனை நெஞ்சினுள் நிறைவாய் நின்ற
ஈசனைக்கண்டு கொண்டது என்னுள்ளமே"

என்றும்,

"எங்கும் ஈசன் எனாதவர்க்கில்லையே ?

என்றும் போற்றிய நாவுக்கரசர் முதலானவர்களும் கூட பரம்பொருளை ஒரு வடிவில் வைத்தும், அதனைத் திருக்கோயிலில் கண்டும், அக் கோயில் திகழும் தலங்களைப் போற்றியும் காட்டவேண்டிய இன்றியமையாக் கடமை ஏற்பட்டது.

கற்றூணைப்பூட்டிக் கடலிட்டபோதும், நீற்றறையிலிட்டபோதும், நஞ்சூட்டிய போதும், யானையால் இடறச் செய்தபோதும், மணிமிடற்றன் அருளால் உய்திபெற்ற நாவுக்கரசர் தன் அன்பர் குழாத்துடன் தலங்கள்தோறும் செல்லும்போது, மக்கட் கூட்டம் அவரைக் கண்டு இன்புறவும், அவர் அருள்மொழி கேட்டுப் பயனடையவும் திரண்டது. அவ்வூர்க் கோயில்களில் குடிகொண்டுள்ள இறைவனைப் பாடும் போது அதனைக் கேட்ட மக்கள், இறைபக்தியோடு, கோயிற் பற்றும், தம்மூர்ப் பற்றும் மிக்கவர்களாய் ஈடுபட்டனர். ஒவ்வொரு தலத்தின் கோயிலிலும் உள்ள இறைவனுக்குத் தனித்தனிப் பெயர் இருப்பினும், பெரும்பாலும் அப் பெயரைச் சுட்டாத சிவபெருமானுடைய பண்புகளையும் தோற்றத்தையும் செயல்களையுமே சுட்டிப் பாடினர். இதனால் ஊரூர் தோறும் கோயில் கொண்டிலங்கும் இறைவன் ஒருவனே என்பதும், ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லா அப்பரம்பொருளே பல்வேறு பெயரில் ஊர்தோறும் வழிபடப் பெறுகின்றது என்பதும் அறியக் கிடக்கின்றது. இது பற்றியே கயிலையில் சிவபெருமான் திருக்கோலத்தைக் காண விரும்பிச் சென்ற நாவுக்கரசருக்குத் திருவையாற்றில் அக்கோலம் காட்டியதும், அக்கோலத்தாலும் காதன் மடப்பிடியோடு களிறு முதலியனவாக அமைந்தது மாகும்.

விறகில் தீயாய், பாலிற் படுநெய்யாய், மாமணிச் சோதியாய் விளங்கும் இறைவனை எளிய மக்களும் உணர்ந்து கொள்ளுதற்குரிய சாதனமாகத் திருக்கோயில் கருதப்பட்டது. ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள என்று வந்தாய் என வினவும் திருக்குறிப்பில் எழுந்தருளி அடியார்களை ஆட்கொள்ள இறைவன் காத்திருக்கும் இடங்களாய்த் திருக்கோயில்கள் அமைந்தன. ஆண்டவன் அருள் நிலையங்களாகத் திகழ்ந்த கோயில்கள் தமிழகத்தில் சிறந்த அளவிலும் பெரிய அளவிலும் எடுக்கப்பட்டன. ஊரின் புறத்தே வருகின்றபோதே

திருக்கோயிலின் உயர்ந்த கோபுரம் கலங்கரை விளக்கம்போல வழிகாட்டி அழைக்கின்றது. தொலைவில் வரும்போது கோபுரக் காட்சியும், அதுபற்றி நெருங்கும்போது கோயிற் காட்சியும் அதனுட் சென்று காணும்போது ஆண்டவனுடைய அருவுருவத் திருக்காட்சியும் மக்கள் உள்ளத்தைப் பரம்பொருள்பால் ஈடுபடுத்திக் கனிவிக்கின்றன. இதனால் சைவ சமயம் கோயில் கோபுரத்தினைத் தூலலிங்கமாகப் போற்றுகிறது. இத்தகைய கோயில்களில் அவை விளங்கும் இடங்கள்—தலங்கள் சிறப்புறுகின்றன. தலத்தின் பெயர் கூறிய அளவில் அங்குள்ள இறைவன் திருக்கோயில் நினைவிற்கு வருதல் வேண்டும். இதனால் தேவாரப் பதிகங்கள் பலவும் அவை பாடப்பெற்ற தலத்தின் பெயரோடு குறிப்பிடப்படுகின்றன. தேவாரத்தில் நாயன்மார்கள் நேரில் சென்று பதிகம் பாடாத தலங்கள் சில, பிற தலப் பதிகங்களில் இடம் பெறுங்கால் "வைப்புத் தலங்கள்" எனப் பாராட்டப் பெற்றன.

திருக்கோயில்களின் இத்தகு சிறப்பினால் அவை அமைந்துள்ள தலங்களுக்குச் சென்று வழிபடுதலேயன்றி அத்தலங்களின் பெயர்களைச் சொல்வதும் வழிபாடாகக் கொள்ளப் பட்டது. திருப்பூவனூர்த் திருக்குறுந் தொகையில் நாவுக்கரசர்,

புல்லம் ஊர்தியூர் பூவனூர் பூம்புனல்
நல்ல மூர்திநல்லூரி நனி பள்ளியூர்
தில்லையூர் திருவாரூர்சீர் காழிநல்
வல்லமூர் என வல்வினை மாயுமே

என்னும் பாடலில் தலப் பெயரை அன்பொடு கூறுவதும் வினைக் கழிவிற்கு ஏதுவாமெனக் காட்டியுள்ளார். இவ்வாறே பாவநாசத் திருப் பதிகப் பாடல்தோறும் பல தலங்களைச் சுட்டி அங்குறையும் இறைவனை நினைக்கப் பாவம் நாசமாகும் என விளக்கியுள்ளார். திருத் தாண்டகப் பதிகம் ஒன்றில் பல்வேறு வகைத் தலங்களையும் தொகுத்துத் திருத்தலக் கோவையாக அமைக்கப்பட்டுள்ளது. எல்லாக் கோயிலிலும் கைலாயநாதனையே காணலாம் என்று அப்பர் குறிப்பிட்டிருப்பது சிந்தித்து உணரத் தக்கதாகும். அப்பர் பெருமான் திருப்பூந்துருத்தியில் இருந்தபோது பாடிய பதிகங்களில் ஒன்று அடைவுத் திருத் தாண்டகம் என வழங்கப்படுகிறது. அப் பதிகப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் பள்ளி, வீரட்டம்குடி, ஊர், காடு வாயில், ஈச்சுரம், குன்றம், ஆறு, குளம், கா என முடியும் தலப் பெயர்கள் தொகுத்துச் சுட்டப்பட்டுள்ளன. ஆண்டவன் ஆலயச் சிறப்பால் அத்தலங்களின் பெயர்களைச் சொல்லவே இறைஇன்பம் கிடைக்கும் என்னும் உண்மையை,

"பரப்பள்ளி என்றென்றே பகர்
வோரெல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப்பாரே"

"இறைவனுறை சரம் பலவும்
இயம்புவோமே"

"குளம் கா என அனைத்தும் கூறுவோமே"

எனக் காட்டியுள்ளார். அடைவுத் திருத் தாண்டகத்தின் ஐந்தாடல் பாடல் இறைவன் உறையும் பல்குகைக் கோயில்களின் பெயர்களைத் தொகுத்துச் சுட்டி அவற்றை இறைஞ்சத் தீவினைகள் அகலும் என்கிறது. அப்பாடல் வருமாறு :

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோடெட்டும் மற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியற் பொருப்பனையகொகுடிக்கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆல்க்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே."

இதனுள் குறிக்கப்படும் கோயில்கள் அவ் வீற்றில் முடியும் ஊர்களின் பெயர்களல்ல. கரக்கோயில், மாடக்கோயில் முதலியன அமைப்பு முதலியவற்றால் வேறுபடும் வகையையும், ஞாழற்கோயில், கொகுடிக் கோயில் முதலியன சிறப்பாலமைந்த பெயரையும் சுட்டுகின்றன. (இவை பற்றிய விளக்கம் தனி ஆய்வுக்குரியது).

திருக்கோயில் தமிழ்மக்களின் வாழ்வில் பெறும் சிறப்பிடம் கருதி அது இல்லா ஊர்கள் வாழ்வுக்குரியன அல்ல என்னும் கருத்தினை

'திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்......
அவையெல்லாம் அடவி காடே'

எனக் காட்டுகின்றார். அடவியும் காடும் என்றோ மனிதகுலம் வாழ்ந்த இடமாகலாம். இன்றும் ஒரே வழி தங்குமிடமும் ஆகலாம். அடவியிலும் காட்டிலும் ஆண்டவன் உறைகின்றான் என்னும் கோட்பாடும் ஏற்புடையதே எனினும் பண்பட்ட நிலையில், நாகரிகமுற்ற சமுதாய வாழ்வில் சமய அடிப்படைக்குக் கருவியான ஆலயங்கள் இல்லா ஊர் எத்துணைச் சிறப் புடையதாயினும் பயனற்றது என்னும் கருத்தினையே இவ்வாக்கு உணர்த்துகிறது.

தோத்திரங்கள் பாடிப் பக்திப் பெருந் தொண்டினால் சைவ மறுமலர்ச்சி ஏற்படுத்திய அருளாளர்தம் வாக்குகளில் கருக்கொண்டு விளங்கிய சைவ சமய நெறிகளை முறைப் படுத்தும் சாத்திரப் பெருமக்களும் திருக் கோயில்களின் சிறப்பினையும், இன்றியமை யாமையினையும் உணர்ந்து, தம் சாத்திரத்தில் அதனை வற்புறுத்துவாராயினர். பொய்

கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித மெய்கண்டாரும் தமிழ் முதல் நூலாய் வடித்துத் தந்த சித்தாந்த மெய் நூலாம் 'சிவஞான போதத்தின்' இறுதியில் இத் திருக் கோயிற் சிறப்பினை 'ஆலயந்தானும் அரனெனப்படுமே' என்று விதித்துக் காட்டி யுள்ளார். சீவன்முக்தர்க்கேயன்றி ஏனை யோர்க்கும் திருக்கோயில் வழிபாட்டுச் சிறப்பினை இவ்விதி வற்புறுத்தக் காணலாம். இதனையே சிவஞான சித்தியார்

'திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவமென வேகண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே'

என்கின்றது. திருமேனி தன்னைச் சிவமெனக் காண்பார்க்குச் சிவன் உறைவதால் அவ் வாலயந்தானும் சிவமாகவே அமையும்.

திருக்கோயில்களின் சிறப்பும், இன்றியமை யாமையும் பெருகவே, கோயில்கள் தத்துவ அடிப்படையில் அமைப்பிலும், தோற்றத்திலும் வளர்ச்சியுறலாயின. அவற்றின் அமைப்பிற் கான நெறிகளைச் சிவாகமங்கள் விரிவாக உணர்த்தத் தொடங்கின. கோபுரம் தூல லிங்கமாக, அவ்வாறே கொடிமரம், பலிபீடம், சுற்றுக்கள் முதலியனவும் உருவகப்படுத்தப் பெற்றன. சரியை கிரியை நெறி நிற்பார்க்குத் திருக்கோயிலின் இன்றியமையாமையினை,

நிலைபெறு மாறெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர் வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக்கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கராசயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை எம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே.........

என்னும் திருத்தாண்டகத்தால் வெளிப்படுத்தி யுள்ளார்.

உள்ளக்கிழியில் உருவெழுதி உற்று நோக்கும் யோக முதலிய நெறி நிற்பார்க்குப் புறக்கோயில்கள் தேவையில்லையேனும், அவர்-தம் உடம்புகளையே கோயில்களாக்கிக் காட்டி அதன் சிறப்புணர்ந்து, அதன்கண் இறைவனை வழிபடும் முறையினை,

காயமே கோயிலாகக்
கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக
மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா
நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனுர்க்குப்
போற்றவிக் காட்டினேமே

என்னும் திருநேரிசையில் புலப்படுத்தியுள்ளார். இவ்வாறே திருமூலரும், சிவபூசை விளக்கஞ் செய்யுங்கால்,

உள்ளம் பெருங்கோயில்
ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுர்க்கு
வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச்
சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும்
காளா மணிவிளக்கே

என மானிட யாக்கையின் மகத்துவம் பேசி, அங்தும் கோயிலின் சிறப்பினை உணர்த்து கின்ருர். திருக்கோயில்களின் இச் சிறப்பால் 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற பழமொழியும் 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்னும் ஔவை மொழியும் தமிழில் தோன்றலாயின.

---

உ
சிவமயம்

# பரசிவனைக் காட்டும் ஞானம்

சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

முன் கட்டுரையிலே பதிபசுபாசம் தெரிக்கும் ஞானம் விளக்கப்பட்டது. இதிலே பரசிவனைக் காட்டும் ஞானம் உணரப்படுமோ? படாதோ? ''உரை உணர்வு இறந்து நின்று உணர்வதோர் உணர்வே'' என்றது திருவாசகம். உணர்வதோர் உணர்வு தான், உணரப்படாத உணர்வு அன்று என்று தான் மாணிக்கவாசகர் அருளினர். அருளினும் உரையும் (பாசஞானமும்) உணர்வும் (பசுஞானமும்) இறந்தால்தான் உணரலாம் என்றதை மறந்து விடலாகாது. "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்'' "பாசமாம் ஞானத்தாலும் படர் பசு ஞானத்தாலும் ஈசனை அறிய வொண்ணுது" மற்று எதனல் அறியலாம்? "பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத நீழற் கீழ் நில்''. நின்ருல் அறியலாம் என்ருர் நம் ஆசாரியர். ''இறையருண் ஞானம் நண்ணித் தேசுறுமதனல் முன்னைச் சிற்றறிவொழிந்து சேர்ந்து, நேசமோடு உயர் பரத்து நிற்பது ஞான நிட்டை." இது நம் ஆசாரியராகிய உமாபதி சிவம் அருளியது. நிட்டை என்றதன் பொருளும் இதில் உளது. இறையது அருண் ஞானம்—சிவஞானம் பதிஞானம் எல்லாம் ஒன்றே. இந்த மூவேறு ஞானமும் திருவாவடுதுறையாதீனத்து மூன்ருவது பட்டத்துப் பரமாசாரியர் அம்பலவாணர் அருளிய தசகாரியம் உணர்த்துமாறு காண்க. ஒரு சிறந்த அநுபவசாத்திரம் அது. தசகாரியத்தை உணராமல் தாம் அறிந்ததே உண்மையெனக் கொண்டும் பேசியும் எழுதும் போலியாட்கள் சைவசித்தாந்தம் உணரும் வேட்கையரை மயக்குகின்றனர். இஃது எத்துணைக்கேடு என நினைக்கின் அது செய்யார். இத் "தசகாரியத்தைப் பலகால் வணங்கு"தல் வேண்டும் என்ருர் முன்னேர் ஒருவர்.

### பாசஞானம்

" பிறவியிற் குருடர் கையிற்
பெற்றிடுங் கோல் போல் ஆன்மா
அறிவை ஆணவமே மூடி
அழித்திடக் கலாதி கோலாய்
நெறிதரச் செயலின் நின்று
நிலையிலாப் பொய் மெய்யாக
வெறிதர நரக சொர்க்கம்
மேவலாற் பாசஞானம்." (6)

பிறவிக் குருடர் போல்வார் சகசமலத்தர். ஆணவத்தால் மூடப்பட்டோர். அக்குருடர் கைக்கோல் ஓரளவு வழிகாட்ட உதவுவது போல்வது கலாதி ஞானம்.

கலையாற் கிரியையும் வித்தையால் ஞானமும் அராகத்தால் இச்சையும் ஆன்மாக்களுக்குச் சிறிது விளக்குந்தொழில் நிகழும் இச்சாஞானக் கிரியை மூன்றையும் இயக்குந் தத்துவம் முறையே அராகமும் வித்தையும் கலையுமாகும். ஆயினும் ஆன்மாவின் ஞானம் அதன் கிரியையால் விளங்கும். அக்கிரியைக்குரிய கருவி கலை. அதன் தோற்றம் வித்தைக்கும் அராகத்துக்கும் முற்பட்டது. படவே கலாதி எனலாயிற்று. வித்தையாதி அராகமாதி என்னும் இடங்களும் உண்டு. ஆண்டாண்டு அததற்குக் காரணமும் உண்டு. "கிரியை என மருவும் அவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம்" என்று சிவப்பிரகாசம் உணர்த்தும் உண்மையையும் தொழில் பன்னுள் செய்த பழக்கத்திற்கு மதிப்புக் கொடுக்கும் உலகியலையும் ஈண்டு நினைக.

கலாதி கோல் ஆய் (-போன்று) நெறிதர (-வழிகாட்ட)ச் செயலில் (-கிரியையில்) நின்று, நிலையில்லாப் பொய்யை மெய்யாக வெறி (ஆசைவெறி) தரலால் கீழ் நரகும் மேல் சொர்க்கமும் (உயிர்) மேவுதற்குரிய நிலையில் நிகழும் ஞானம் பாசஞானம்.

### பசுஞானம்

இயைந்திடும் சரியை ஆதிக்கு
எழுந்த அப் பதங்கள் பொய்யாய்க்
கயந்து, மெய் வேற தாகக்
கருதிக் கண்டு உயிர் மேலாகப்
பயந்திடல் பசுவின் ஞானம்
பார்க்கின் நின்மலமதாக
உயர்ந்திடும் சாக்கிரத்தின்
உண்மை என்று உரைப்பர்
மேலோர். (8)

இங்கு உணர்த்தும்வண்ணம் பசுஞானம் இன்னது என்று உணரப் பெறுதல் (உணர்தல்) உணரும் விருப்புடையோர் கடனுகும். "காதலினுன் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம்" கரணக் கேடு, சினையிலும் முட்டையிலும், கருவிலும் மரம்

முதலியவற்றிலும் உள்ள உயிர்கள் இறப்பு, உறக்கம், மயக்கம், வாயுஸ்தம்பனம், விஷ பானம், விஷ சம்பந்தம் முதலியவற்ருல், தன்னிழல் தன்னடிற்புகும் பெற்றிபோல உயிர் தன்னைத்தான் அடையும் சமாதியில் ஆணவ மலம் தவிராமையால் இந்நிலையும் பசுஞான நிலையே. இத் தசகாரிய விருத்தம் உணர்த்துந் திறத்திலே பசுஞானம் இன்னது எனப் புலப்படப் பெறுதல் வேண்டும்.

சரியையின் பயன் சாலோகம். கிரியையின் பயன் சாமீபம். யோகத்தின் பயன் சாரூபம். ஞானத்தின் பயன் சாயுச்சியம். இவற்றுள் முன்னைய மூன்றும் பதமுத்தி எனவும் பின்னைய தொன்றே பரமுத்தி எனவும் கொள்க. பத முத்திகள் நிலையில்லாதவை. பொய்த்தொழி வன" முடிசார்ந்த மன்னரும் மற்றும் உள்ளோரும் முடிவிலொரு பிடிசாம்பர். பொய் வைத்த சொப்பனமாம் மன்னர் வாழ்வும் புவியும் எங்கே? மெய்வைத்த செல்வம் எங்கே? மண்டலீகர்தம் மேடை எங்கே? கை வைத்த நாடகசாலை எங்கே? இது கண் மயக்கே. "என்ருற் போல்வனவே பதமுத்திகள். இன்னோரன்ன பதவிகளைப் பொருட்படுத்த லாகாது. அவற்றைப் பெறுதலிற் கசப்புறல் வேண்டும்." பதங்கள் பொய்யாய்க் கயந்து" என்றதற்கு இது கருத்து. மெய் வேருகக் கருதுதல்:- பரமுத்தியே சத்தியம் என்றறிந்து அது பெறவே முயலவேண்டும். அம்முயற்சி எல்லாத் தத்துவங்களையும் கடந்து எல்லாப் பதவிகளையும வேண்டாது நிற்கும் மேல் நிலை உயிர்க்கு உண்டாகும். அது தன்னிலையைத் தான் அடைந்த நிலை. இது பசுநிலையே அன்றிப் பதிமுதுநிலை ஆகாது. தசகாரியத் துள்ளே தத்துவரூபமும் தத்துவ தரிசனமும் தத்துவ சுத்தியும் ஆன்மரூபமும் ஆம். இந்நான்கும் நிகழ்ந்து 'யானே முதல்' என்று கொண்டு தன்னைத் தலைவன் எனக் கருதும் நிலை. இதுவே பசுஞான நிலை. இங்கு ஆணவ மலவாசனை ஒழிந்திலது. அதனுற் பசுத்துவம் நீங்கிற்றிலது. இவ்விடத்து நிகழும் 'யானே முதல்' என்று கொண்ட ஞானம் பாசஞான மும் அன்று. பதிஞானமும் அன்று. பசுஞான மேயாயிற்று. வாசனு மலம் ஒழிந்தாற்ருன் பசுத்துவம் போம். சிவத்துவம் ஆம்.

தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம் ஆய நான்கும் நின்மல சாக்கிரம் என்கின்றனர் பலர். தசகாரியம் எல்லாம் கிரியை அல்ல. அவை உண்மை ஞானம் எனப்படுவன. உண்மைக் கிரியை எனப்பட்டில. "இந்த நான்கும் அறிந்து நீங்கி நிர்மல சாக்கிரம் பிறந்து" என்றது அம்பல வாண குருவாக்கியம். (சிவஞான போத சிந்தனையுரை. பக்கம். 84) சிவாய நம என்னும் ஐந்தும் இருப்பின் சமலநிலையே அன்றி அமலநிலை ஆகாது. உயிர்க்கு நம இரண்டும் நீங்கிய நிலையே நிர்மல சாக்கிராவத்தை யாகும். ந+ம நீங்கிய போது ய 'யானே முதல்' எனத் தன்னைத் தலைவனுகக் கருதிற்று. அக்கருத்து அறிவாமோ? அறியாமைதானே! அறியாமை ஆணவத்தின் காரியம் தானே? ஆணவம் (ம தான் நீங்கிற்றே) அறியாமை ஏது? மலம் நீங்கிற்று. நீங்கியும் அறியாமை இருப்பதால்தானே 'யானே முதல்' என் கின்றது. எனவே ஆணவமலவாசனை இருக் கின்றது என்பது பெற்ரும். பெறவே அது நின்மல சாக்கிரமேயாயிற்று. ஆயினும், நின்மல சொப்பனமும் நின்மலதுரியமும் நின்மல துரியாதீதமும் ஆய மூன்றும் அல்லாத இரண்டும் (நின்மல சாக்கிரமும் நின்மல சுழுத்தியும்) பயனில்லாதன எனக் கழிக்கப் பட்டன. படவே, சிவஞான போதத்தினும் சிவஞான சித்தியாரினும் நின்மல சுழுத்தி தள்ளப்பட்டது. நின்மலசாக்கிரம் ஏழாவது சூத்திரத்தால் உணர்த்தப்பட்டது. சிவப் பிரகாசத்தில் நின்மல சொப்பனத்தை ஆன்ம தரிசனம் (பாசமதகல ஞானம் பற்றல்), ஆன்ம சுத்தி (தான் பணியை நீத்தல்) ஆன்மலாபம் (ஞேயத்தழுந்தல்) எனும் மூன்றுமே உபதேசிக் கலாயின. நின்மல சாக்கிரமும் நின்மல சுழுத்தியும் கூறப்பட்டில. இவ்வுண்மை திருவிளங்கத் தேசிகருரையில் இல்லை. அதை நம்பிப் பிழைபட எழுதிய கட்டுரையும் சைவ சித்தாந்த சமாசப் பத்திரிகையில் வெளி யாயிற்று. யாழ்ப்பாணத்துரையில் 71ஆவது திருவிருத்தத்தின் முன் ஞானத்தால் வரும் பயன் என்ற தலைப்பின் கீழ் 1. ஆன்மதரிசனம் ஞான தரிசனத்தில் ஆன்மதரிசனமும் தத்துவ சுத்தியும் நிகழ்தல் என்றிருக்கின்றது. ஆன்ம ரூபத்திற்கு முன்னது தத்துவசுத்தி. அது ஞான தரிசனத்தில் நிகழுமா? நிகழின் ஆன்மரூபமே அன்றி ஆன்மதரிசனம் நிகழாது. சிவரூபத்தின் உடன் நிகழ்வது ஆன்மதரிசனம் ஞானதரிசனம் என்றதும் மரபுவழு. தசகாரியத் துள் ஞானதரிசனம் என்று ஒன்று இல்லை. திருவிளங்கத் தேசிகர் உரையில்லை. பற்பல இடங்களிற் பிழையுள்ளன.

நின்மலமாக உயரும் சாக்கிரம் பசுஞான நிலையாயினும், மலவாதனையும் ஆன்மபோத நிகழ்ச்சியும் தீராத நிலை. (ஷி சிந்தனையுரை. (பக்கம். 94) நீ ஐம்பொறியின் நீங்கிச் சிவ ஞானத்தைப் பெற்று நின்ருலும், முன் நெடுங் காலும் மும்மலத்துடனே கூடி நின்ற சகலன் ஆகையால், முன்னைய மலப் பழக்க வாசனை யினுலே மீள ஐம்பொறியுடனேயுங் கூடித் தேகாதிப் பிரபஞ்சத்தைப் பற்றி மயங்குவாய். தண்ணீரை மறைத்து நின்ற பாசியானது கல்லை விட்டு எறிந்தபோது விலகிப் பின் பரந்து

வந்து மறைப்பது போல முன் பழகின மும்மல வாதனை சாத்திர விகாரம் (அருள் நூல் ஆராய்ச்சி) பண்ணிச் சிவனை நினைந்து நின்ற போது உன்னை விட்டு நீங்கியும் நினையாக போது உன்னை வந்து கூடி மறைத்தும் நிற்கும். அவ்வாதனை தாக்காமல் இருப்பதற்கு உயிர்க்கு உயிராய் நிற்கிற கர்த்தாவை இடைவிடாமல் சாத்திர விசாரத்துடனே அன்பு செய்து நினைந்து மயக்கத்தின் நீங்கிக் கொள்வாயாக. (94–95) இஃது,

"ஐம்பொறியின் அல்லை எனும்
அந்த தர சிவனை
ஐம்பொறியை விட்டங்
கணை சகலன் ஐம்பொறியின்
நீங்கான் நீர்ப் பாசிபோல்
நீங்குமல கன்மம் வரின்
நீங்கானை நீங்கு நினைந்து"

என்னும் திருவெண்பாப் பொருள். இதில் 'நீங்கும்' என்றிருப்பது 'அந்த தர' என்னும் முன்னிலை யொருமையொடு பொருந்தாது. நீங்கு என்று ஒருமை ஏவல்வினையே பொருந்தும். முனிவரது சிற்றுரையிலே நீங்கானை நினைந்து நீங்கும் (–நீங்கிக் கொள்ளும், என்றும் பேருரையிலே 'நீங்கானை நினைந்து நீங்கு என்றுங் கூறினர்" என்றும் உள்ளன. சிற்றுரையில் "நீங்கும் என்னும் மகரம் சந்தி நோக்கிக் கெட்டது. நீங்கு எனவே பாடம் கொண்டு அணை என வேறு பிரித்து முன்னிலை யேவலாக்கி அதற்கு ஏற்ப நீங்காய் எனப் பாடம் திரித்துரைப்பாரும் உளர்.'' என்று இலக்கணத்தொடு பாட பேதமும் காட்டப் பட்டன.

இதுவரை பசுஞானம் கூறும் முகத்தால் அது குறித்த பிறவுண்மைகளும் கூறப்பட்டன. இனிப் பதிஞானம் கூறுதும். பதிஞானம் என்றது சிவஞானம் இறைஞானம் முதலிய பெயர்களானும் கூறப்படும். "பாசஞானமாகிய கருவிகளுக்கும் பசு ஞானமாகிய சிற்றறிவுக்கும் எட்டாது வாக்கு மனாதீத கோசரமாய் நிற்கிற'' கர்த்தாஞானமே சிவஞானம். முதனூலில், "ஊனக்கண் பாசம் உணராப் பதி"ஞானம் என்றது. 'ஊனக்கண் இறையறிவு எனப்படும். பசுஞானம் பேதமை." என்று எழுதினருமுளர். (திருவள்ளுவர் 2000 ஆண்டு மலர் பக்கம். 24)

"ஒத்திடும் மலம் அகற்றி
உயிரினை அணைத்துத் தம்பால்
வைத்திட இச்சா ஞானச்
செய்தியை வைத்து ஞானப்
பித்திட, மலங்க ளெல்லாம்
பெயர்ந்திடப் பின்னம் அற்றுச்
சத்துடன் இச்சை மேவித்
தரிப்பது சிவஞானந் தான்.'' (9)

என்னும் ஒத்திடும் மலம்–சகசமலம். அகற்றல் மலவாசனையும் இல்லாதபடி நீக்கல். உயிர் ஆன்மா பசு என்னும் ஈண்டு இல்லை. உயிர் என்றதும் கூடாததே. பாட்டில் மோனைக் காகவும் பிறர்க்கு விளங்கற்காகவும் உயிர் என்றார். உயிர்த்தல் பிராணவாயு இருந்தாலன்றியில்லை. ஆசிரியர் தொல்காப்பியரும் உயிர்த்தலால் உயிர்த்தல் என்றார். "அகரமொடுயிர்த்தலும் ஏனையுயிரொடுருவு திரிந்துயிர்த்தலும் ஆயீரியல உயிர்த்தலாறே,'' என்றது அது. உயிரை அணைத்தல். சிவனிச்சை ஞானக்கிரியையாக, ஆன்ம இச்சை ஞானக்கிரியை ஆதல். அதாவது பசு கரணத்தைச் சிவகரணம் ஆக்குவதே உயிரினை அணைத்தல். அதுவே சிவரூபத்தின் நிகழும் ஆன்ம தரிசனம் எட்டாவது சூத்திரப் பொருளில்.– "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து'' எனத் தம்முதல் உணர்த்தினதும் விட்ட நிலையும் அது. என் மகன் நீ என்று ஐம்புல வேடரிற் பிரித்து நின்ற நிலையே அணைத்த நிலை. அருட்குருவாகிவந்து அவரின் நீக்கியதும் மல மகற்றியதும் அணைந்ததின் வேறல்ல. அநுபவ ஞானம் இருந்தாலன்றி இந்நிலை விளங்காது. தம்பால் வைத்தல்–சிவஞான மேயாதல். யகாரத்தை வகாரத்துள் வைத்தல் அணைத்தல். வகாரமே என யகாரத்தை ஆக்குவதே தம்பால் வைத்திட இச்சா ஞானச் செய்தியை வைத்தல். ஞானப் பித்து–வாசியிட நிற்கை. பித்துப் பத்தரினத்தாதலும் அது. மலங்களெல்லாம் பெயர்ந்திடல்:– எட்டாவது சூத்திரத்தில் 'விட்டு' என்றதும் மலம் அகற்றி என்றதும் அல்ல. பத்தாவது சூத்திரத்தில் "மலமாயை தன்னொடு வல்வினையன்றே என்றது. மல நீக்கம் முன்னது. பின்னது மலவாசனை நீக்கம். அறுபதாவது யாண்டு முடிவிற் செய்யும் மணத்தின் பின்னரும் தன் கிடக்கையிற் கையைப் பக்கத்தில் நீட்டித் தழுவத் தடவுவது வாசனை. தழுவிக் கலப்பது உண்மை. இரண்டும் ஒன்றாமோ? இஃது அநுபவம் அன்று. அன்பர் ஒருவர் தம் அநுபவம் என்னக் கேட்டது. 'வேம்புகின்ற புழு' ஒன்று தான் உவமானமாகுமோ? போதம் மேலாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும் வாதனை தாக்குமா போல் என்றது உவமான மாயிற்று. மழைப் பெயல் மாறித் தீர்ந்தும் புள்ளும் மாக்களும் கவன்று நோதக மரங்கள் எல்லாம் நுண்துளிதுவற்றும் என்றது உவமேயம். இங்கு மாற்றிக் கொண்டு விளங்க வுணர்க. பெயர்தல்–முன் இருந்து பின் நீங்கல். பின்னின்மையே பெயர்தற்குரித்து அது முன்னிருப்பின்றி நிகழாது. முன் வரவும் பின் பெயர்தலும் முறை. 'பெயர்த்தும் செயக் கிடந்ததில்' "பெயர்த்தும் அவனுடைய ஆரூர் கேட்டாள்" பின்னமறல்–அபேதம்

சத்து-சிவசத்து. இச்சை குருசீடனை நோக்கிச் சொன்னது:- என் இச்சை உன்னோடு உறும் இச்சை. சீடன்:- என் இச்சை மலத்தோடு உறும் இச்சை என்றான். குரு:-உன் இச்சையை என்னிச்சையாகத் தருவாயோ? சீடன்:-தருவேன். குரு:-தருவதுண்டேல், நீ அறு. அற்று. அருளிச்சையாகு. அருளிச்சையாக அடை அடையின், சிவேச்சை அடையும். அச்சிவேச்சையே நிட்டை.

"என்னிச்சை உன்னேடுறும்இச்சை உன்
இச்சையே மலத்தின்
றன்னிச்சை; உன் இச்சை என் இச்சை
யாகத் தருவதுண்டேல்
அன்(ன) இச்சை நீ அற்று அருளிச்சை
அடையும் அந்த [ஆக,
மன்னிச்சையே நிட்டை என்றான்
சிவாய நம் மன்னவனே."

நிட்டை விளக்கம் 17.

சத்துடன் இச்சைமேவுதல்-சிவசத்தினிடத்து ஆன்மாவிற்குச் சகச நிட்டையுண்டாதல்.

மேவுதல்:- செயற்கையன்று. இயற்கையாய் எழும் நசை. "நம்பும் மேவும் நசையாகும்மே.'' (தொல் உரி), தரிப்பது-ஆதாரமாகித் தாங்குவது. தரிப்பது தரா, தரை. "ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாம்'' என்றதால் தரிப்பது விளங்கும். அது சிவஞானமே என்றும் உறுதியாகப் புலப்படும்.

இது வரையில் , பாசஞானம், பசுஞானம், (பதி-) சிவஞானம் மூன்றும் அநுபவ வாக்குக்களைக் கொண்டு விளக்கப் பெற்றன. மூன்றாவது ஆகிய சிவஞானம் பதிபசுபாசம் தெரிக்கும் ஞானம் ஆதலை முன்னைய கட்டுரையில் எழுதினோம். அடுத்துப் பரமசிவனைக்காட்டும் ஞானம் ஆதலை விளக்குதும். சிவஞான சித்தியார் திருவிருத்தத்தின் பொருளுண்மையுள் ஒரு பாதியே முன்னைய கட்டுரைப் பொருள். அடுத்து வருவது முடிவாய ஞானத்தைக் குறித்தது. இடைப்பட்ட இக்கட்டுரையில் மூவேறு ஞானமாகப் பகுத்துச் சொல்லும் சாத்திரப்படி அவற்றைத் தசகாரிய விளக்கம் கொண்டு பொருளொடு எழுதினோம். சன்மார்க்கத்தோர் இக்கட்டுரைகளைப் பெரும் பயன் ஆகப் போற்றி ஏற்றுக் கொள்வர் எனக் கருதுகின்றோம்.

## "செல்வத்தின் உரிமை"

அப்பரடிகள், சாதி வேற்றுமைகளைக் கடிந்ததோடு மட்டுமன்றிப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையும் வெறுத்தார். சமுகப் பொருளாதாரக் கொள்கையில் "தர்மகர்த்தா முறை" என்பது ஒரு கொள்கை. இந்தக் கொள்கையை மனித குலத்திற்குத் தெளிவான வகையில் அறிமுகப்படுத்தியவர் அப்பரடிகள். இந்தத் தர்மகர்த்தாக் கொள்கை வழியில்தான், அண்ணல் காந்தியடிகளும் இந்திய சமுகத்தை வழி நடத்தினர். தர்மகர்த்தாக் கொள்கை 14, 15ஆம் நூற்றாண்டில் தான், உலகிற்குப் பரவலாக அறிமுகம் செய்து வைக்கப்பெற்றது. தர்மகர்த்தாக் கொள்கை வழியில், செல்வம் யாரிடம் இருந்தாலும் அச் செல்வம் மக்களுடையதே; மக்களே அச்செல்வத்தை அனுபவித்தற்குரியவர். செல்வத்தை உரிமையாகப் பெற்றவர்கள் செல்வத்தைப் பேணிப் பாதுகாத்து மக்களுக்கு வழங்கும் கடமை பூண்டவர்களே; செல்வத்தின் உரிமை, முற்றான அனுபவத்திற்கு வாயிலல்ல. இந்தத் தர்மகர்த்தாக் கொள்கையின் கரு, ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பரடிகளின் அருள்பழுத்த நெஞ்சில் தோன்றிவிட்டது.

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# ஸ்தோத்திரப்பா விளக்கம்

## "ஆழ்வாரின் ஆழ்ந்த விண்ணப்பம்"

தஞ்சை என். எஸ். தாதாசாரியார், பி.ஓ.எல்.,

(1) முன்னுரை

'மலை' என்றால் இமயம். 'நிலை' என்றால் முக்தி நிலை. 'நூல்' என்றால் திருக்குறள். 'புகழ்' என்றால் திருப்புகழ். 'பகவான்' என்றால் திருமால். ஈசுவரன் என்றால் சிவபெருமான் என்பது போல், "ஆழ்வார்" என்றால் நம்மாழ் வாரே. இவரை யாரழைத்தாலும் அவர் யாவருக்கும் இவர் நம்மாழ்வாரே. இப்பட்டத் தை இவருக்குத் "திருவரங்கனே" அளித்துப் பெருமை பெற்றார். தமிழ்த் தென்றல், திரு. வி. க. அவர்கள் நம்மாழ்வாரை நமக் களித்த தமிழ்நாட்டையும், தமிழ்மொழியையும் சங்கை இன்றி அங்கை குவித்து வணங்கினர்; வாழ்த்தினர்; வாய்வெருவுகின்றார். இறைவனா கிய திருமாலே ஆழ்வாரின் அருளிச்செயலைத் தம் தேவிமார்களுடன் திருவோலக்கத்தில் குழாமாடித் தம் மகுடம் சாய்த்து மெய்நின்று கேட்டருளினர் என்றால், இதற்குமேல் இவர் பெருமைக்குச் சிறப்புப் பாயிரம் உண்டோ? பரமன் முன்பு படிந்து பணிந்து அமர்ந்து தெய்வமொழியாக ஓதுவர். திருவள்ளுவரும் குறிப்பாக இத்தெய்வ வாக்கை "படிறு அற்ற ஈரம் கொண்ட இன்சொல்" என்றும், "செம் பொருள் கண்டார் வாய்ச்சொல்", என்றும் உணர்த்தினர் போலும். ஆழ்வார் தம்மையே அழைத்துக் கொண்ட திருநாமம் "இன்பமாரி" என்பது. இவ்வாழ்வாரின் திருவாக்கிற்குப் "பகவத் விஷயம்" என்ற தனிச் சிறப்புப் பெய ராகும். நம்மாழ்வார் ஆழ்வார்களின் வரிசை யில் நான்காமவராயினும், சிறப்பினால் முதல் வர். இவர் ஸ்ரீ வைணவ குலத்திற்கே பெருந் தலைவர். ஆழ்வார்களின் அருளிச்செயல் ஓதினவர்களை, இருந்தமிழர், பாலேய் தமிழர், இசைகாரர் என்றழைப்பது போல் "அத்தியா பகர்கள்" எனவும் அழைப்பார்கள். அத்தியா பகர் என்றால் இறைவனுக்கு அருகே இருந்து அரும்பொருளுணர்த்தும் ஆசிரியர்கள் எனப் பெயர். அதனால்தான் திவ்வியப்பிரபந்தம் ஓதுமிடமெல்லாம் ஆலயங்களில் உள்ள திரு மால் "நாட்டுப்பண் கேட்டமனிதர்கள் போல்" நின்று வணங்கி நிற்பர். நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு வேதங்களின் சாரமான நான்கு பிரபந்தங்களில் முதன்முதலில் அருளிச் செய்தது, ருக்கு வேத சாரமான திருவிருத்த மாகும்.

(2) திருவிருத்தம்

இப்பிரபந்தத்தில் ஆழ்வார் தமது பக்திக் காதலின் மிகுதியை வெளியிடுவதால் இப் பெயர் ஏற்பட்டது. இங்கு "விருத்தம்" என்ற நூல் செய்தி என்ற பொருளையும் கொண்டு நின்றது. ஆழ்வார், எம்பெருமானை முந்நிலைப் படுத்தி "எம்பெருந்தகையே! உம்மைக் கலவி மகிழும் பேரின்பத்தைத் தடைசெய்யும், இவ் வுடல் தொடர்பை, நீக்கி அருளவேணும்" என்கிறார். "துறையின்"பால் படுங், கட்டளைக் கலித்துறையில், அமைந்த 100 பாக்களை உடை யது இந்நூல். முதல் கடை தவிர மற்ற யாவும், அந்தாதிச் சொற்றொடர், பொருட் டொடர் நிலைகளில் கலவியதாய்; அகத்துறை யில் அமைந்த பாசுரங்களைக் கொண்டது.

நிற்க, இந்நூலில் ஆழ்வார் "புருஷோத்தமனை கண்ணாளன் முன்பு தான் பெண் தன்மை எய்திப் பராங்குச நாயகி என்ற திருப்பெயர் பூண்டு பிராட்டிபோல் அருளியதால் திரு + திருமகளின் நிகழ்ச்சியைக் கூறும் + விருத்தம் = என்ற நூலா யிற்று" எனவும் பெரியோர் பணிப்பர். மாணிக்க வாசகர் அருளிய திருக்கோவையாரின் கருத் தும் இதுவும் ஒத்திருக்கும். பிரமன், நான் முகம் கொண்டு, நான்மறைகளை ஓதியதுபோல நம்மாழ்வாரும் தாமானதன்மை, தாய், தோழி, தலைவி என்ற நான்கு நிலைகொண்டு பேசிய தில் இதில் தலைவி நிலைகொண்டு பேசுகிறாள். இறைவன் ஒருவனே எல்லாம் வல்லவன். அதனால் அவனே ஆண். மனைவிபோல்

அவனுக்கே ஆட்பட்டிருந்து அவனடி பணிவதே நம் கடமை என்ற உண்மை நிலையை விளக்கவே ஆழ்வார் பெண் தன்மையை எய்தியது. உலகச் சிற்றின்ப நிலையுடன் ஒருக்காலும் ஒப்பிடக்கூடாது.

(3) பாசுரம்

பொய் நின்ற ஞானமும் பொல்லா
ஒழுக்கும், அழுக்குடம்பும்
இந்நின் றநீர்மை இனியா
முருமை, உயிரளிப்பான்,
எந்நின் றயோனியு மாய்ப்பிறந்
தாய், இமையோர்தலைவா!
மெய்ந்நின் றுகேட்டருளாய்
அடியேன் செய்யும் விண்ணப்பமே

பொழிப்புரை:—தாம் படைத்த உயிரினங்களை எல்லாம் தந்தை எனத்தாம் காத்தருளவே தன்னிச்சையினால் எந்நின்ற யோனியுமாய்ப் பிறவாமல் அவதரித்த தெய்வத்துக்கரசே! ஸ்ரீமந் நாராயணா! அடியேனது, பொய்மை நிலைபெற்ற அறிவும், தீயநடத்தையும், அசுத்தங்களுக்கெல்லாம் இருப்பிடமான இவ்வுடம்பும் கூடிய இப்பிறவி என்ற இயல்பை மாற்றி, இனி நான் இப்பிறவியை அடையாதபடி நீ அருள உனது பொற்றாமரை அடிகளில் வணங்கி, ஆழ்ந்து விண்ணப்பிக்கிறேன். நீ என்முன் மெய்யாக நின்றும், உருக்காட்டியும், அலக்ஷியமில்லாமலும் இவ் விண்ணப்பத்தைத் திருச்செவி சாய்த்துக் கேட்டருள வேண்டும்!

விளக்கவுரை:—இந்நூலின் சிறப்புப் பாயிர-(தனியன்)த்தில் ஸ்ரீ கிடாம்பி ஆச்சான் என்பவர் "தாயின் வயிற்றில் பிறந்து, பெண்களுடன் தனி இன்பம் கண்டு மகிழும் மக்களே! நீங்கள் உண்மையில் உய்ந்து பேரின்பம் அடைய வேண்டுமானால், "நம்+ஆழ்வாரின்" கனி மருந்து மொழியான இத்திருவிருத்தத்தைக் கேளுங்கள்" என்றார்.

பொய்நின்ற ஞானம்:—என்பதால் இருள் தருமாஞாலத்தில் பொய்யான-அழிவுள்ள-சிற்றின்பப் பொருள் பற்றிய-இவ்வறிவு. நாய் வால்போல் எதற்கும் பயன்படாது என்ற கருத்தை "நின்ற" என்ற சொல்காட்டும். நின்ற-பற்றிய, நிலைத்த ஆகிய எனப்பொருள். திருவள்ளுவரும் இப்புடையில் 'பொருள்' அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் ஆம் மாணாப்பிறப்பு" என்றார்.

பொல்லா ஒழுக்கம்:—"நான், எனது" என்ற மலம் கலந்த நடத்தை. இந்நடத்தை நஞ்சு கலந்த உண்கலமாகும் என்றவாறு.

அழுக்குடம்பு:—நம் வயப்படாமல் நம்மைத் தம்வயப்படுத்தும் உடலிது. அழுக்கிலிருந்து தோன்றி, அழுக்கைக் கொண்டு வளர்ந்து, கொசுகுபோல் அழுக்கையே நாடும் இயல்புடையது என்றபடி.

இந்நின்ற நீர்மை:—முன்பு தண்டகாரணியத்தில் அரக்கர்களால் தாக்குண்ட முனிவர்கள் தம் உடல் புண்களை இராமனிடம் தொட்டுக் காட்டியது போல், ஆழ்வாரும் தன் உடலின் தீயபண்பைச் சுட்டிக் காட்டுகிறார்.

இனியாம் உறுமை:—முடிவில் 'அடியேன்' என்று ஒருமையில் கூறி இங்கு "யாம்" எனக் கூறுவதால், ஆழ்வார் நம்மையும் அகப்படுத்தி இறைவனிடம் விண்ணப்பிக்கிறார் எனலாம். ஆழ்வார் தாம் உலகியலுக்கு முற்றிலும் மாறாக அவதரித்தநாள் தொடங்கி எழுந்தருளியிருந்த 16 ஆண்டுவரை எத்தகைய குறையுமற்றவர். அவர் இவ்வாறு விண்ணப்பிக்கும் முகத்தால் நமக்கு உற்றதை எடுத்துக்காட்டுகிறார் எனலாம். பெரியவாச்சான்பிள்ளையும் "பராநர்த்தம்-(பிறர் துன்பம்) நெஞ்சில் பட்டக்கால் நாட்டுக்காக மற்றாடுகிறார்" என அருளினார். "உறுமை" என்ற எதிர்மறை வினை எச்சச் சொல் "செய்யும், கேட்டருளாய்" என்ற இரண்டு சொற்களுடனும் சேரும்.

எந்நின்ற யோனியுமாப் பிறந்தாய்:—இறைவன் தனது எளிமைக் குணத்தால் எல்லாப் பிறவியும் பிறந்தார். இதனால் நம்மோடு ஒக்க இவரையும் 'பிறப்பவர்' என அறவே நினைத்தல் கூடாது. சிறையில் இருப்பதால் கைதியும் சிறைச்சாலைக் கண்காணிப்பாளரும் ஒன்றாவார்களா? உடமைக்கு ஒருமுழுக்கு, உடையானுக்கு 10 முழுக்கு என்றபடி, அவனது உடமையான நாம் கீழ் நிலத்தில் விழுந்து கெட்டழியும் பொழுது, பத்து முழுக்கு-அதாவது அவதாரம் எடுக்கிறார் பெருமாள். இதனை ஆழ்வார், தமது முதற் பிரபந்தமாகிய இந்நூலின் கண்ணே முதல்பாடல் முதற்சொல்லில் "பொய்" எனத் தொடங்கிக் கடைசிப் பிரபந்த

மான, திருவாய் மொழியின் கடைச் சொல்லின் ''பிறந்தார் உயர்ந்தே'' எனக் காட்டினர். வேதமும். பைஉச்ரேயான்பவதி ஜாயமான: என்றது. இதனை ''உயிரளிப்பான்'' என்பதால் உணர்த்தினர்.

இமையோர் தலைவா:—தேவர்களுக்குத் தலைவனன திருமால், நம்பால் தொண்டருக்கும் தொண்டனைப் பணிசெய்யும் பேரருளாளன் என்கிருர். அரசன் எனக் குறிப்பிடாமல் ''தலைவா'' என இங்கு விளித்தது ஒரு நயம்.

மெய் நின்று கேட்டருளாய்:—எனது மெய் விண்ணப்பம் கேட்டருள வேண்டும் எனவும் பொருள் கொள்ளலாம். ''நின்று கேட்டருளாய்'' என்பதனல் அங்கும் இங்கும் ஓடாமல் கவனத்துடன், திருவுள்ளம் காட்டிக்கேட்டு, அருள வேண்டும்; மறுக்கக்கூடாது என்கிருர். ''பெருமாள் திருவீதிப் புறப்பாடுகளில் வேத பாராயணம் கேட்க நிற்பதில்லை. அருளிச்செயல்—திவ்வியப்பிரபந்தம்—கேட்க நிற்பதுண்டு. ஆழ்வார் இங்ஙனே நின்று கேட்டருளாய் என்று பிரார்த்தித்தனலன்ரே''? என அழகிய மணவாளச்சீயர் நயம் கூறினர்.

அடியேன்:—இறைவன் முன்பு தம் ஊரையும் பேரையும், உற்ரூர், உறவினர்களையும் நினையாமல், எல்லாம் அவனே என்று கொண்டும், அவனுக்கே நாம் ஆட்பட வல்லோம் என்ற எண்ணத்துடனும் இருக்க வேண்டும் என்ற கருத்தை ''அடியேன்'' என்ற சொல்லால் உறுத்திக் காட்டினர் ஆழ்வார்.

ஆக இப்பாடல் மிகவும் பொருள் நயம் கொண்டது. விரித்தால் ஒரு நூலாகும். ஸ்ரீவைணவப் பேராசிரியர் ஸ்ரீ தேசிகன் இப்பாடலுக்குத் தனியாக விளக்கம் கூறினர் என்ற பெருமையும் இந்நூலுக்கு உண்டு.

## நவராத்திரி [பாரதியார்]

ஒவ்வொருவனுக்கும் மூன்றுவிதச் சக்தி வேண்டும் :—(1) அறிவு (2) செல்வம், (3) தைரியம். இந்த மூன்றும் நமக்கு இஹலோகத்திலே கிடைக்கும்படியாகவும், இதனல் பரலோக இன்பங்களும் சாத்தியமாகும்படியாகவும் நாம் தெய்வத்தை வழிபடுகிரேம். முக்திக்கு மாத்திரமே தெய்வத்தை நம்புவது சிலருடைய வழி; இஹலோக இன்பங்களுக்கும் தெய்வமே துணையென்று நம்பி, இன்பங்கள் வேண்டுமென்று தெய்வத்திடம் கேட்டு வாங்கிக் கொள்வது மற்ரெரு வழி.

விக்கிரமாதித்தியன் வணங்கிய தெய்வம், காளிதாஸனுக்குக் கவிதை காட்டிய தெய்வம், பாரதநாட்டு மஹாஜனங்கள் இன்னும் தலைமையாகக் கொண்டாடும் தெய்வம். ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் சக்தியாக விளங்கும் லக்ஷ்மிதேவதை, சிவபிரானுடைய வலிமையாகத் திகழும் பார்வதி, பிரம்மதேவன் தலைவியாகிய சரஸ்வதி. மூன்று மூர்த்திகள்; மூன்று வடிவங்கள், பொருள் ஒன்று; அதன் சக்தி ஒன்று; பொருளும் அதன் சக்தியும் ஒன்றே. இங்ஙனம் ஒன்ருக விளங்கும் சக்தி யென்ற தெய்வத்தை ஹிந்துக்கள் உபாஸனை செய்வதற்கு விசேஷ பருவமாக இந்த நவராத்திரியின் காலத்தை வைத்துக் கொண்டிருக்கிருர்கள், காரணமென்ன?

பராசக்தி மழையருள் புரியும் சரத் காலத்தின் ஆரம்பமென்று கருதியா? சரத்காலம் நம் நாட்டில் ஒன்றுபோல எல்லாப் பகுதிகளிலும் தொடங்க வில்லையாயினும் ஓரிடத்திலே தோன்றிய திருவிழா நாடு முழுவதும் பரவியிருக்கலாம்.

...பராசக்தி யெங்கும் இருக்கிருள். எப்போதும் அவள் இருக்கிருள். தொழிலே உலகம். அவளே உலகம். குழந்தைகளும் ஸாமான்ய ஜனங்களும் அவளைச் சிலையென்று நினைக்கிருர்கள். அவள் சிலையில்லை; உண்மையொளி. அது கோயிற்புறத்திலே மாத்திரம் இல்லை. அகத்திலுமிருக்கிறது...பெரிதும் சிறிதுமாகிய முதற்பொருள் பராசக்தி.

இதனைத் தியானத்திலே நிறுத்துகிரேம். இதனை நாவிலே புகழ்ச்சி புரிகின்ரேம். செய்கையில் இதனைப் பின்பற்றுகிரேம். நமது மதி தெய்வ மதியாகின்றது. நமது நாவு புதிய வலிமையும் மஹிமையும் பெறுகின்றது, நமது செய்வினை தர்மமாகின்றது. ஒரே வார்த்தை: சக்தியை வேண்டினல் சக்தி கிடைக்கும்.

[ஆதாரம் : பாரதி நூல்கள்-மூன்ரும் தொகுதி-பக்கம் 212-213]

# எழுத்துப்பட்டி மன்றம்



## திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா? இல்லையா?

### "வழிபடும் உரிமை இல்லை"

[கருவறைக்குள் சென்று வழிபடும் உரிமை இல்லை என்று வந்த பல கட்டுரைகளில் ஒன்று மட்டும் சென்ற இதழில் வெளியானது. அதைப் போலவே வந்த வேறு பல கட்டுரைகளின் முக்கிய கருத்துக்களை மட்டும் இங்கு வெளியிடுகின்றோம். கட்டுரையாளர்கள் எழுதிய வண்ணமே வெளியிட இயலாமைக்கு இடமின்மையேகாரணம் என்பதையும் தெரிவிக்கிறோம்.]

குருக்களைத் தொடர்ந்து திரு. வை. சோமசுந்தரம் அவர்கள் கார்மேகத்தின் கருத்துக்களைக் கீழ்க்கண்டவாறு மறுக்கிறார்.

(1) சாதி வேற்றுமைகள் அகல அனைவருக்கும் வழிபாட்டு உரிமை வேண்டும் என்கிறார், கார்மேகம் அவர்கள். ஆனால் சாதி பேதங்களை நீக்குவதையெல்லாம் மாநில-மைய அரசுகள் பார்த்துக் கொள்ளும். அரசியலைப் பொறுத்தது அது.

(2) கருவறை வழிபாட்டு உரிமை தராவிடின் நமது சமயம் அழிந்து விடும் என்ற கார்மேகம் அவர்களின் வாதம் வேடிக்கையானது. முசுலீம்களாலும் நாத்திகர்களாலும் அழியாத நம் சமயமா இதனால் அழியப் போகிறது.

(3) கண்ணப்பரைக் கருவறைக்குள்ளே விட்டதால் அது பழைய வழக்கமாகுமா? நந்தனரை விடவில்லையே-ஏன் கோவிலுக்குள்ளே கூட விடவில்லையே!

(4) அப்பர் பாடினர்-எனவே கருவறை வழிபாடு நம் சமயநெறி என்ற கார்மேகம் அவர்கள் வாதாடுகிறார்களே! அப்பரடிகள் பாடிவிட்டால் அது நம் சமயநெறியாகி விடுமா? அப்பர் பாடல்தான் நம் சமய நெறியா?

(5) கருவறைக்குள் இடவசதியில்லை. எனவே அனைவரும் வழிபடத் தொடங்கினால் நெருக்கம் ஏற்படும். தூய்மை குறையும்.

திரு. சா. ப. சபாரத்தினம், அவர்களின் வாதம்.

(1) வழிபடுவது உரிமை என்கிறார் கார்மேகம். உரிமை என்ற சொல்லே கோவிலுக்கும் சமயத்திற்கும் துளியும் சம்பந்தமில்லாதது. நாம் அனைவரும் கடவுளின் அடிமைகள். அடிமைகளுக்கு உரிமை ஏது?

(2) மரத்தடியில் மிருகமும் பறவையும் இறைவனை வழிபட்டது சாத்தியமாகலாம். நியாயமாகலாம். ஆனால் கோவிலுக்குள் கட்டடத்திற்குள் அது நியாயமில்லை.

(3) அந்தணர்கள் மட்டும் நுழையும் சுயநலம் என்கிறார் கார்மேகம். எல்லா அந்தணர்களும் கூட நுழைய முடியாது. வேறு திருக்கோவிலில் பூசை செய்வோர் மட்டுமே அனுமதிக்கப்படுகின்றனர்.

(4) மேலும் கருப்பக் கிரஹத்தின் நான்கு சுவர்களும் நான்கு வேதங்கள். காமாட்சியம்மனின் கருவறை 24 மந்திரங்களைப் பிரதிபலிக்கும் 24 தூண்களைக் கொண்ட காயத்ரி மண்டபம். அதனை அனைவரும் மிதிப்பது பாவமல்லவா?

திரு. தேவராஜன் அவர்கள்

எல்லோரையும் கருவறைக்குள் அனுமதித்தால், திருமேனியில் உள்ள விலையுயர்ந்த நகைகள், கவசங்கள் இவற்றிற்கெல்லாம் பாதுகாப்பு குறைந்து விடாதா? நகைகளை யெல்லாம் எப்படிப் பத்திரமாக வைத்துக் கொள்ள முடியும்?

திரு. பா. சுந்தர் அவர்கள்

கார்மேகம் காசியை உதாரணம் காட்டுகிருர். காசியில் அனைவரும் தொட்டு வழிபட்டாலும் அந்தத் தூய்மைக் குறைவைத் துடைப்பதற்காக, இரவில் ஓர் அந்தணர் இறைவனை பூஜிக்கிருர்.

## "வழிபாட்டு உரிமை உண்டு"

கட்டுரைகளின் வாதங்களை மறுக்கிருர் திரு. சிவ. அம்பலவாணன்.

மதிப்பிற்குரிய குருக்கள் ஐயா அவர்களுடைய முதல் வாதம், "அம்மையப்பனை வழிபட இரண்டுவகை உண்டு. அதில் ஆத்மார்த்த பூஜை எல்லோர்க்கும் தொட்டு வழிபடும் உரிமையை அளித்துள்ளது. ஆனல் பரார்த்த பூஜையை ஆதிசைவ அந்தண குருக்கள் மட்டுமே செய்ய வேண்டும்," என்பது. அது ஏன் என்பதுதான் நம்முடைய இன்றைய கேள்வி. பிறப்பால் அவர் மட்டுமே அதற்கு உரியவர் என்ருல், பிறப்பின் அடிப்படையில் தொழில் என்பதை மாற்றிக் கொள்ளுகிற காலம் இது என்பதை நினைவூட்டக் கடமைப் பட்டுள்ளேன். கட்டுப்பாடு வேண்டாமா? என்கிருர், குருக்கள். ஆண், பெண் என்ற இரண்டே ஜாதிதான் உலகில் என்று சொல்லி தங்கையை மணந்து கொள்ள முடியுமா? என்று வேறு கேட்கிருர். கட்டுப்பாடு அவசியம்தான். அனைவரும் வழிபடலாம் என்று மட்டும் கேட்டால் அங்கே கட்டுப்பாடு இல்லை. ஆனல் சீலமுள்ள அனைவரும் என்று கேட்பதிலேயே கட்டுப்பாடு எது என்பதைக் குருக்கள் அவர்கள் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். தங்கையை மணக்கக் கூடாததுதான்! அதற்காக மாமன் பெண்ணை மட்டுமே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற சட்டமும் இல்லை. வேறு மணக்கத் தகுதியுள்ள எந்தப் பெண்ணை வேண்டுமானலும் திருமணம் செய்து கொள்ள அனுமதிப்பதுபோல, பூஜிக்கத் தகுதியுள்ளவர்களை வழிபட அனுமதிக்க வேண்டாமா? குருக்கள் செய்வது மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்வதுபோல என்று வைத்துக் கொள்ளுங்களேன்.

கண்ணப்பனைக் கார்மேகம் அவர்கள் சுட்டிக் காட்டியிருப்பதை மறுத்து, கண்ணப்பன் நிலை எல்லோர்க்கும் வந்துவிடுமா? கண்ணப்பன் நிலை பெற்றவர்கள் அல்லவா அந்த வழி–பாட்டைப் பெறலாம் என்பதுபோல குருக்கள் எழுதுகிருர்கள். கண்ணப்பன் நிலை எல்லோர்க்கும் வராதுதான். இப்போது தொட்டு பூசை செய்கிற பூசாரிகள், குருக்கள், பட்டாச்சார்யர்கள்–எல்லோரும் உட்பட யாருக்குமே அந்த நிலை வரமுடியாதுதான். ஆக, கண்ணப்பனைப் போல ஆக முடியாதவர்கள் இப்போது இறைவனைப் பூவிட்டு வழிபட உரிமை பெற்றுள்ள போது மற்றவர்களும் பெறுவதில் என்ன பிழை.

அந்தணர்கள் வழிபட்டார்கள் என்றும், அன்றே அந்தணர்களுக்கு வழிபாட்டு உரிமை உண்டு என்றும், திருமந்திரத்தில், பெரிய புராணத்தில் இருந்து ஆதாரம் காட்டியுள்ளார்கள். அந்தணர் வழிபட்டனர். என்பதற்கும் அந்தணர் மட்டுமே வழிபட்டனர், அவர்கள் மட்டுமே அப்படி வழிபட வேண்டும் என்பதற்கும் வித்தியாசம் உண்டு. மேலும் அந்தணர் என்பது பிறப்பின் அடிப்படையானதா? அல்லது இந்தத் தொழிலைச் செய்வதனல் அவர்கள் அந்தணர்களாயினர் என்பதும் சிந்திக்க வேண்டிய விஷயம். எப்படியிருந்தாலும் மற்றவர்களுக்கும் கருவறை வழிபாட்டு உரிமை கிடையாது என்று அவர் ஆதாரங்களை எடுத்து வைக்கவில்லை. அந்தணர்க்கு இருந்தது என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனல் மற்றவர்க்கு இல்லையா என்பதுதான் கேள்வி.

சட்டசபையில் தேர்ந்தெடுத்தவர்கள் மட்டுமே பேச முடியும். எல்லோரும் பேசிவிட முடியுமா? என்று உதாரணம் மூலம் கேட்கிருர் குருக்கள். உங்கள் உதாரணத்தையே

எடுத்துக்கொள்வோம். சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மட்டுமே பேச முடியும் என்றுதான் விதி உண்டே ஒழிய, சட்டசபைக்கு இவர் இவரைத்தான்-பிறப்பின் அடிப்படையில் ஜாதி அடிப்படையில் மட்டுமே-தேர்ந்தெடுக்க வேண்டும் என்று விதி உள்ளதா? சுதந்திர நாட்டில் யார் வேண்டுமானாலும் உரிய தகுதிகளோடு (சட்ட பூர்வமான தகுதிகளையே சொல்கிறேன்) சட்டசபை உறுப்பினராக முடியுமே. அப்படிப் பார்த்தால் வழிபாட்டு உரிமை சீலமுள்ளவர்கள் அனைவருக்கும் உரியதுதானே !

தேங்காய்-அர்ச்சனை சீட்டு வருமானம் போய் விடாதா? நற்பணிகளுக்குரிய வருவாய் போய் விடாதா? என்று, நியாயமான கவலைப்படுகிறார் குருக்கள். பொது நியதிப்படி குடிமக்கள் கோவிலுக்குத் தங்கள் வருவாயில் ஒருபங்கு என்று காணிக்கையாக்க வேண்டுமே ஒழிய இதுபோன்ற டிக்கெட்டு-ஹவுஸ் புல் விஷயங்கள் திருக்கோயிலுக்கு ஏற்றதல்ல. ஆனாலும் கோவில்களின் நிதிநிலை பழுதடையாமல் காக்க வேண்டியுள்ளதால், பூவிட்டு நீரிட்டு வழிபடுகிறவர்களிடத்தும் இதே போன்று டிக்கட்டு மூலமாக வசூலித்துக் கொள்ளலாமே?

கட்டுப்பாடு அவசியம்தான். ஆனால் கட்டுப்பாடு என்ற பேரில் அநீதிகளை நியாயங்களாக வேஷம் போட்டு உலாவ விடக்கூடாது. இப்போதுகூட சீலமுள்ள அனைவருக்கும் கருவறை வழிபாட்டு உரிமை வேண்டும் என்றுதான் கார்மேகம் கேட்கிறார். ஆக இப்போது கருவறைக்குள் வருவோரும் நீராடி, நீறுடி, ஐந்தெழுத்தையோ அரிநாமத்தையோ சொல்லி, சமயச் சின்னங்களை உடலிலும், சிந்தனைகளை உள்ளத்திலும் பதித்துத்தான் வரவேண்டும் என்று இன்றைய இளம் தலைமுறை வேண்டுகிறது.

அடுத்து நம்முடைய திரு. வை. சோமசுந்தரம் அவர்கள் வாதங்களை ஆராய்வோம். சாதி வேற்றுமைகளைப்பற்றி மாநில, மைய அரசுகள் கவலைப்பட்டுக் கொள்ளும். நாம் ஏன் கவலைப்பட வேண்டும் என்று கேட்கிறார். மனிதனுக்கு மனிதன் சமம். கோத்திரமும் குலமும் கொண்டு என்ன செய்யப் போகிறோம்? மனிதருக்குள் உயர்வு தாழ்வு இல்லை என்பதை வேரூன்றித் தான் சைவம் என்ற அன்பு மதம் வேரூன்றியது. அரசும் அரசியல்வாதிகளும் தேர்தலில் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள சாதிகளைக் காப்பாற்றுவார்கள். சாதி பேதத்தால்தான் அரிஜனங்கள் இப்போது மதம் மாறுகின்றனர் என்பதைச் சிறிது சிந்தியுங்கள். எனவே சமயத்தின் ஆதிநோக்கம்-இந்தச் சாதி நீக்கம்.

முஸ்லீம்களாலும், நாத்திகர்களாலும் அழியாத சமயம் இந்த உரிமை தராமையால் அழியுமா என்று கேட்டு இருக்கிறார்.

எதிரிகளால் ஓர் அணி அழிவதைக் காட்டிலும் அந்த அணியிலேயே அவமானப்படுத்தப் பட்டவர்கள், ஏமாற்றி வஞ்சிக்கப்பட்டவர்கள் கோபமடையும்போது அந்த அணி மிக விரைவாக அழிகிறது.

நந்தனாரை விடவில்லை என்பதை மிக மகிழ்ச்சியான வாதமாக வைத்துள்ளார்கள். நந்தனாரை யாரும் தடுக்கவில்லை. அவரே பயந்தார். அப்படியே தில்லைதீட்சதர்கள் தடுத்தாலும், தில்லை நடராசன் அவரை உள்ளே அழைத்தான். நீங்கள் சொல்கிறபடி சமூகத்தின் பழக்கம் என்பது தடுத்தாலும், இறைவனின் இதயம் அவனை விரும்பியிருக்கிறது அல்லவா? இறைவனின் இதயத்திற்கும் விரோதமாக நாம் நடக்க வேண்டுமா?

அப்பர் பாடினால் நம் சமய நெறியாகி விடுமா? என்று எழுதியுள்ளார்கள். பிறகு வேறு யார் பாடினால் அது நம் சமய நெறியாகும் என்று தெரியவில்லை. இருளை விளக்குக் கிழித்துள்ளது என்று எடுத்துக்காட்டினால் இந்த விளக்குத்தான் இருளைக் கிழிக்க வேண்டுமா? என்று கேட்பது எவ்வளவு தவறு. காலமெலாம், சிவனை நினைந்து, காளவாயில் வெந்தபோதும், கல்லொடு கடலில் மிதந்தபோதும், ஆனை வந்தபோதும் அயராது அரன் நாமம் சொல்லி ஆண்டவனிடத்தே வாசி தீர்த்த காசி பெற்ற தலைசிறந்த தொண்டன் என்று பாராட்டும் பெற்ற அப்பர் சொன்னது நம் சமய நெறியில்லையென்றால் வேறு யார் சொன்னது நம் சமய நெறி?

ஒருவர் ஒருவராக வரிசையாகப் போனால் இடவசதி ஒரு பிரச்சினையா? தூய்மை செய்வது என்பது கருவறை ஊழியர் அர்ச்சகர்

பார்த்துக் கொள்ள வேண்டிய வேலே. எனவே இடவசதியும் தூய்மைக் குறையும் ஒரு வாத மல்ல.

திரு. சா. ப. சபாரத்தினம் அவர்கள் நாம் ஆண்டவனின் அடிமைகள்; அப்படியிருக்க நமக்கு உரிமை என்று எதுவும் கிடையாது என்கிருர். அப்படியாஞல் குருக்களுக்கு மட்டும் அது எப்படி உரிமையாயிற்று. அவர்கள், உச்சநீதி மன்றம் (சுப்ரீம் கோர்ட்டு) வரை போக எந்த உரிமை அனுமதித்தது?

மரத்தடி வேறு, கோவில் வேறு என்கிருர். இரண்டிலும் மூர்த்தியும் உள்ளிருக்கும் இறை வனும் ஒன்றுதான். எனவே மலரிட்டு நீரிட்டு வழிபடுவதால் இறைவனுக்கு ஒன்றும் குறை வந்து விடாதே!

அந்தணரிலும் ஒரு பிரிவினர் மட்டுமே செல்ல லாம் மற்றவர் போகக் கூடாது என்றுள்ளதே என்கிருர் நமது சா. ப. சபாரத்தினம் அவர்கள். அதுவும் கூடத் தவறுதான்-ஒரு குறிப்பிட்ட பகுதியாளர் இன்னெரு குறிப்பிட்ட தம் இனத் தாருக்கே தடை விதிப்பது மனிதாபிமானக் கண்ணேட்டத்தின்படி பிழைதான்.

கருவறை வேதம் என்கிருர். அதைக் குருக் கள் மிதிக்கும்போது மற்றவர் மிதித்தால் என்பிழை? மேலும் ஒவ்வொரு கோவில் கரு வறையும் அவர் சொல்வதுபோல நான்கு சுவரோடும், 24 தூண்களோடும் வேதமாக, மந்திரமாகக் கட்டப்படுதில்லே. பலவடிவங் களில் பல கோணங்களில் கருவறைகள் கட்டப் பட்டுள்ளதைப் பார்த்துள்ளேன். கருவறையை வேதமாகப் பாவித்துக்கொண்டாலும் அன் பிஞல் எம்பெருமான் சிவபிரானேயே கண்ணப் பன் காலால் மிதித்திருக்க, இறைவஜ வழிபடச் செல்கிருேம் என்ற பக்தியுணர்வோடு நாம் செல்லுகிறபோது கருவறையை மிதிப்ப தும் பிழையாகாது.

திரு. தேவராஜன் அவர்கள்

வாதம் சிறிது சிந்திக்கத் தக்கது. ஒரு குறிப் பிட்ட நேரத்தில், வரிசையாக அனுமதிச் சீட்டுடன் சில நியமங்களுடன் அன்பர்களே மலரிட்டு நீரிட்டு வழிபட அனுமதித்தால், அந்த நேரத்தில் இறைவனுக்கு விலேயுயர்ந்த நகைகளே அணிவிக்காமல் இருந்தால் இந்தப் பிரச்னே எழ-வாய்ப்பே இல்லே. திரு. பா. சுந்தர் அவர்கள் கூற்றும் உண்மைதான். காசியில் நடப்பதுபோல் அந்தணரும் இறை வனேப் பூஜிக்க வேண்டும் என்பதுதான் நம் முடைய நோக்கம். காசியில் நடப்பது போலவே இங்கேயும் ஒரு அந்தணர் பூஜிக்கலாம்.

எனவே, உள்ளன்போடு, சில நியமங்களுக் குட்பட்டு இறைவனே மலரிட்டு நீரிட்டு கருவறைக்குள் சென்று எல்லோரும் வழிபட உரிமை வழங்க வேண்டும். பிறப்போ, ஜாதி யோ, இதர சில்லறைக் காரணங்களாலோ ஒருபெரும் இலட்சியம் சிதறிப் போய்விடக் கூடாது. இது நாமாகப் புதிதாகக் கேட்கும் புரட்சித் திட்டம் அன்று. நம் முன்னேர்கள் அமைத்த, இன்றும் வடநாட்டில் பழக்கத்தில் உள்ள, சமயத்தின் அடிப்படையில் பேதமற்ற சமுதாயம் காண உதவும் நல்லதிட்டம். அது விரைவில் நடைமுறைக்கு வந்து நாமனேவரும் நலம்பெறவேண்டும்.

——:×:——

எழுத்துப்பட்டி மன்றம், இன்னும் சுவையான கட்டுரைகளுடன் தொடர்ந்து வெளிவரும்.

ஆசிரியர்.

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

ஆசையே பற்றி அலைகிறேன் அன்புனக் காக்கலின்றி
வேசையே போல் மனம் விட்டுவிட் டேநான் வினைதொடுத்தேன்
மாசிலா மாணிக்க மேஉனை அந்தோ மறந்திருந்தேன்
கூசினேன் எப்படி நின்னருள் பெற்றிடக் கூடுவதே. (69)

தீரா வயிற்று வலியால் தினந்தொறும் செத்துச் செத்துப்
போராடி அந்தோ புகலொன்றி லாது புலம்பி நைந்தேன்
ஈராறு தாமரைக் கண்ணுடை யாய்நீ எனக்கிரங்கி
வாரா திருந்திடின் வாழ்வேது மில்லை வறியனுக்கே. (70)

நோயுற்ற வாழ்க்கையேன் நொந்தது போதும் நுடங்கியினி
பாயுற் றிடின்மனை பாழுற் றிடும் ஞான பண்டிதனே
தாயற்ற பிள்ளை தனியிருந் தாலெனத் தாங்ககில்லேன்
வாயற்றுப் போகும் வரையழு வேன் இங்கு வந்தருளே. (71)

இடும்பன் வயிற்று நோய் தீர மலைக்கா வடியெடுத்துக்
கடம்பா நின் சந்நிதி வந்தினி துய்ந்தான் கசட்டு மனக்
கொடும் பாவி நானேர் குறியிலேன் குன்றக் குடிமுருகா
இடும்பை தவிரா திருந்தேன் வருந்தினேன் என் செய்வனே. (72)

அச்சம் பொருமைகா மாதி அகந்தைகள் அத்தனையும்
இக்கண மேதவி டாக்க எடுப்பாய் சிலைநெடு வேல்
கைத்தலம்! என்றன் கடவுளே ஓங்கு கலிமதுரைச்
சொக்கனின் பிள்ளை நீ யல்லவோ ஞானச் சுடர்க்கொழுந்தே. (73)

சீலத் திருவினர் சேவடி போற்றினர் செம்மையிலேன்
காலம் கழித்தேன் கவலை யுழந்தேன் கடு நரகப்
பாலம் அமைத்தேன் படு குழி வீழ்ந்தேன் பகையசுரர்
ஓல மிடச் சுடர் வேலெடுத் தாய் எனக் குய்வருளே. (74)

காவடி எத்தனை எத்தனை நின்றன் கருணை பொழி
சேவடி காண வருவன செம்மைத் திருமனமே
பூவடி வைக்கின்ற புண்ணியா குன்றைப் பொருப்பிருக்கும்
ஓவிய மே நலம் ஓர்ந்திடேன் எப்படி உய்வதுவே. (75)

அங்கம் புரண்டுருள் வார்திரு வீதியில் அன்பரெல்லாம்
செங்கரம் கூப்பியே கும்பிடு தண்டம் செலுத்திடுவார்
பொங்குகண் ணீரைப் பொழிவார் அழுவார் புலம்பிடுவார்
இங்கே மரமென் றிருந்தனன் இன்னும் இறந்திலனே. (76)

# கண்டதும் கேட்டதும்

[எழுத்துப் பணியையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு, உன்னத இலட்சியங்களை உலகுக்குத் தந்த மகான்களின் வாழ்க்கைக் குறிப்புக்களையும், அந்த அறிஞர் பெருமக்களின் இலட்சியங்களையும், புராதன சரித்திர நிகழ்ச்சிகளையும்பற்றி எளிய, இனிய தமிழ்நடையில் எழுதித் தமிழன்னைக்கு மாலையாகச் சூட்டியவர்.

தேசியத்தை அடிப்படையாகக் கொண்ட-தேசிய உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதற்கென்றே தோன்றிய-இதழ்களில் பணியாற்றியவர். மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதை வெறுப்பவர்; சிறந்த சிந்தனையாளர்; தன்னடக்கம் மிகுந்தவர்; அன்பு நிறைந்தவர்; கடவுள் பக்தர்; சமய ஞானம் பொலியப் பெற்றவர்; சீலமே பெரிதுடையது என வாழ்கிறவர். தமிழ்த்தென்றல் திரு. வி. க.அவர்களைப்போல திரைமறைவிலே இருப்பதில் திருப்தி கொண்டவர்; வெளிச்சத்திலே வரக்கூச்சப்படுகிறவர். எளிய வாழ்க்கை; உயர்ந்த நோக்கம் என்ற மணிவாசகத்திற்கு இலக்கியமாக-இலக்கணமாகத் திகழ்கிறவர். 1942ஆம் ஆண்டு மே மாதம் சொத்து சுகங்களை விட்டுப் பர்மாவிலிருந்து நடைப் பயணமாகவே தாயகம் திரும்பியவர். வயது எண்பத்தொன்று ஆகப்போகிறது. அதாவது ஆயிரம் பிறை காணப் போகிறவர். எழுதிய நூல்களின் எண்ணிக்கையோ சுமார் 75க்கும் அதிகமாக இருக்கலாம். 'சமுதாயத்தின் பிரதிநிதி; தனிப்பட்ட வியக்தி' என்றெல்லாம் வியந்துபாராட்டக்கூடிய அறிஞர். இவர்தான் வெ. சாமிநாத சர்மா. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி அறியாத-பேசவராத இந்த அறிஞரை அருளோசைக்காகப் பேட்டி கண்டோம். கண்டோம்-கேட்டோம்; அவர் தந்த பேட்டி விவரத்தை உங்களுக்குத் தருவதில் பெருமை கொள்கிறோம்.]

நாங்கள் சென்ற சமயம்-பகல் சுமார் மூன்று மணி-அப்போது சர்மா அவர்கள் சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி-எதைப் பற்றியோ ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்தபடி இருந்தார். எங்களைப்பற்றிச் சொன்னவுடன் இனம் கண்டு-அந்தத் தள்ளாத வயதிலும் எழுந்து நின்று வரவேற்று-இருக்கையில் அமரச் சொன்னார். நாங்கள் அந்தச் சிந்தனையாளருக்குப் பேரவை வெளியீடுகளைத் தந்தோம். அவற்றை



மேலோட்டமாகப் பார்த்தவுடனே பேரவைப் பணிகளைப் புரிந்துகொண்டார். 'பேரவைத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ அடிகளாரின் சீரிய தலைமையில் செவ்விய முறையில் பணியாற்றி வரும் பேரவைக்கு என் பாராட்டுக்கள்' என்ற வாசகத்துடன் பேட்டி தொடங்கியது. கேள்விகளைப் பார்த்தார்-சிறிதுநேரம் சிந்தனை. பிறகு இவற்றுக்கெல்லாம் "சுருக்கமான பதில் போதுமா?-விரிவான விளக்கம் தேவையா?" என்ற கேள்விக் கணை. அவர் அப்படிக் கேட்டதும் 'நாங்கள் தங்களிடம் நிறைய எதிர்பார்க்கிறோம்' என்றோம். 'நாங்கள்' என்பதை 'நாடு' என்று சொல்லியிருக்கலாம் என நினைக்கிறீர்களா? இப்படி நினைப்பதற்குள் அவர் விளக்கங்கள் தர ஆரம்பித்துவிடுகிறார். இனி, நாமும் சர்மா அவர்களுடன் சேர்ந்து கொள்ள வேண்டியதுதானே!

சமயத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் முரண்பாடு உள்ளது எனப் பேசுவதில் உண்மை உண்டா?

சமயத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் முரண்பாடு உள்ளது எனப் பேசுவதில் உண்மை கிடையாது. இரண்டும் ஒன்றேதான் என்பது ஆராய்ந்து பார்த்தால் தெரியும். விஞ்ஞானம் என்பது வெறும் அறிவே; ஆனால், இறையியல்

## "வளர்க! வாழ்க!"



நமது பேரவை ஆலோசனைக் குழு உறுப்பினர் சன்மார்க்க நெறியாளர்–அருள்நெறிச் செல்வர்-பொள்ளாச்சி திருமிகு நா. மகாலிங்கம் அவர்கள் உலக நாடுகள் பயணத்தை இனிதே முடித்து வந்திருப்பது நமது நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும் வேளாண்மை வளர்ச்சிக்கும் பயன் தருவதாகும். மகாலிங்கம் அவர்கள் திருவருளால் இனிதே சிறப்புற்று வளர்க! வாழ்க!

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

எனப்படும் சமயமோ சிறந்த அநுபவமாக அமைவது. சமயம்தான் அறிவுத்துறைகள் அனைத்திற்கும் உயிர்நாடி.

விஞ்ஞானம், ஐம்புலன்களுக்குள் அகப்படுகின்ற புறப் பொருள்களையும், பருப் பொருள்களையும் மட்டுமே ஆராய்ச்சி செய்கின்றது. ஆனால், சமயமாகிய இறையியலோ ஐம்புலன்களுக்கும் எட்டாது அப்பாற்பட்டு விளங்கும் அகப் பொருள்களையும், நுண்பொருள்களையும் ஆழ்ந்துணர்ந்து அநுபவிக்க வழிகாட்டுகிறது. எனவே, சமயமும் விஞ்ஞானமும் தம்முள் மாறுபாடு கொள்ளாமல்-ஒன்றையொன்று தழுவியே நிற்கிறது.

நம் இந்திய மக்களில்-குறிப்பாகத் தமிழ் மக்களில் ஒருசிலர் தமக்குச் சமய உணர்வும் நம்பிக்கையும் இல்லை என்று சொல்லிக் கொள்வதைப்பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

மனிதன் இரண்டு கால் பிராணியாக நடமாடிக் கொண்டிராமல் மனிதத் தன்மையோடு கூடியவனாக வாழவேண்டுமானால் அவன் ஒழுங்கையும் ஒழுக்கத்தையும் ஊன்றுகோல்களாகக் கொள்ளவேண்டும்.

இன்றைய மனிதன் ஒரு நாகரிகப் பிராணி; அவன் இன்னும் நாகரிக புருஷனாகவில்லை. அவனுக்கு அறிவு இருக்கிறது; இருதயமில்லை. ஓரிரண்டு பேரைக்கூடத் தன்னால் அணைக்க அவனுக்குத் தெரியவில்லை; ஆனால், ஆயிரக்கணக்கானபேரை ஆகாய விமானத்திலிருந்து குண்டு எறிந்து கொல்வதற்கு அவன் சக்தி பெற்றுள்ளான். உடலை மெருகிட்டுக் காப்பாற்ற அவனுக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது. ஆனால், உயிரை வளர்க்க அவனுக்குத் தெரியவில்லை. செடிகொடிகளுக்குக்கூட உயிருண்டு, உணர்ச்சியுண்டு என்று கண்டு பிடித்திருக்கிற அவன், தன் சகோதர மனிதர்களை-உயிரும் உணர்ச்சியுமற்ற ஆடற் கருவிகளாக ஆட்டிவைக்கின்றான்.

சமய உணர்வு என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியாக நான் கருதவில்லை. உண்மைச் சமயமே வாழ்க்கை என்பது என் இலட்சியம். உயர்ந்த வாழ்க்கைதான் சமயம். நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ள வகுத்துக் கொண்ட சாதனம்தான் சமயம். மனிதன் அறநெறிகளைக் காப்பதற்காக-ஒழுக்க நெறிகளை நிலைப்பெறச் செய்வதற்காகச் சமயத்தைச் சாதனமாகக் கொண்டான் என்பது என் கருத்து. சமய உணர்வும் நம்பிக்கையும் இல்லை என்பவர்கள் ஒழுக்கத்தையும் ஒழுங்கையும் வேண்டாம் என்று கூறுவார்கள்! அன்பு, அறிவு, இரக்கம், நீதி தியாகம் போன்ற மனிதப் பண்புகள் நிறைந்த மனிதத்துவமே சமயம் என்பது.

விஞ்ஞான யுகத்தில் வாழும் நமக்குப் பக்தி உணர்வு வளருமா? குறையுமா? எப்படி?

உலகனைத்தையும் ஆட்டிவைக்கின்ற பரம்பொருள் ஒன்று உண்டு என்பதில் திட

நம்பிக்கை கொண்டவன் நான். கனவிலும் என்னைவிட்டு அகலாத இந்த நம்பிக்கைதான் வறுமைச் சுழல்களினின்றும் பயங்கர நோய்களி லிருந்தும் பலதடவை என்னைக் காப்பாற்றி வந்திருக்கிறது.

இந்தக் கடவுள் நம்பிக்கையைப் பக்தி யென்றும், சிரத்தையென்றும் பலவாருகக் கூறுவர் ஆன்ரோர். எவனிடத்தில் கடவுள் நம்பிக்கை இருக்கிறதோ அவனிடத்தில் தன்னம்பிக்கை தானுகவே வந்து குடிபுகுந்து விடுகிறது. இவையிரண்டும் எண்ணெயும் திரியும் போன்றவை. இவ்விரண்டையும் பற்றுக் கோடுகளாகக் கொண்டவன், அறிவு செல்ல முடியாத இடங்களில் எல்லாம் துணிந்து செல்வான். அறிவினுல் செய்துமுடிக்க முடியாத காரியங்களையெல்லாம் இவனுல் சாதிக்க முடியும். ஆனுல், துரதிஷ்டவசமாக இந்த இருபதாம் நூற்ருண்டில், விஞ்ஞான மானது மனிதனுடைய அறிவை மட்டும் வளர்த்துக் கொடுத்திருக்கிறது. அதற்கேற்ற அளவில் அவனுடைய இதயம் விரியவில்லை. அவனிடத்திலேயுள்ள அசுர சம்பத்துகள் கொக்கரித்துக் கொண்டு கும்மியடிக்கின்றன. அவனிடத்தில் நியாயமாக இருக்கவேண்டிய தெய்வ சம்பத்துகள் அடங்கி ஒடுங்கிக் கிடக் கின்றன. இன்றைய மனிதன் ஆகாயத்திலே பறக்கிருன்; நீரிலே நீந்துகிருன். ஆனுல் பூமியின்மீது நடக்கக் கற்றுக் கொள்ளவில்லை. மனிதனை மனிதனுக்குவது-மனிதனுக வாழ வைப்பது பக்தி உணர்வு ஒன்றுதான். மனிதப் பண்புகள் உள்ள வரையில் பக்திநெறி வளரும்-வாழும்.

சமுதாய முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் சமய உணர்வுகள் எப்படித் துணை செய்யும்?

சமய உணர்வுகளை-கடவுளை மறந்த கல்வியோ, வாழ்க்கையோ மனித சமுதாயத் திற்கு உண்மையான-நிலையான முன் னேற்றத்தை உண்டாக்காது. எங்கும் நீக்க மற நிறைந்துள்ள இறைவனை அகத்திலேயும் புறத்திலேயும் கண்டு ஆனந்திக்க சமய உணர்வு இன்றியமையாத் தேவையாகும். எவ்வுயிரும் என்னுயிர்போல எண்ணியிரங்க தெய்வ அருட் கருணைசெய்ய சமயம் உறுதுணையாக உள்ளது. சமய உணர்வுகள் இல்லாத வாழ்க்கை தெய்விக வாழ்வாக உயராது. சமய உணர்வு உடம்பிற்கு மூச்சுப் போன்றது. பயிருக்கு வேலிபோல சமுதாயத் திற்கு- முன்னேற்றத்திற்கு-அதன் வளர்ச் சிக்குச் சமயம் தேவைதான்.

தற்கால நாகரிகமானது நம்மை எங்கே கொண்டுபோய் விட்டிருக்கிறது? இயற்கை வாழ்வு, எளிய வாழ்வு வாழ நமக்குத் தெரிய வில்லை. விசாலமான மனப்பான்மையையும், நாணயத் தன்மையையும் சமய உணர்வுகளால் பெறலாம். நமது வாழ்க்கைத் தராசை நாம் சம எடையிலே வைத்துப் பார்க்க சமய உணர்வு துணைபுரியும். சமய உணர்வு இல்லாத சமுதாயம், வாசனையில்லாத புஷ்பம்; படிப் பில்லாத பணம்; ஆத்மா இல்லாத உடல். ஒழுங்கையும் ஒழுக்கத்தையும் மனிதனிடத் திலே வளர்த்து, அதன் மூலம் சமுதாயமானது ஒழுங்காகவும் ஒழுக்கத்துடனும் நடைபெற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்னும் உயர்ந்த நோக்கத்துடன்தான் சமய உணர்வுகளை ஆன்ரோர் வகுத்தனர். மனித சமூகம் என்று சொன்னுல், அதற்குச் சில லட்சணங்களும் சில லட்சியங்களும் உண்டு. சமய உணர்வுகள், மனிதனுடைய பூரண வளர்ச்சியைக் குறிக் கோளாகக் கொண்டே ஏற்பட்டன. மனிதன், தன்னுடைய மனிதத் தன்மையில் எவ்வளவு தூரம் வளர்ச்சி பெறுகிருனே, அவ்வளவு தூரம், எந்தச் சமுதாயத்தில் அவன் ஓர் அங்கத்தினனே அந்தச் சமுதாயமும் வளர்ச்சி யடையும். சமயஉணர்வும் கடவுள் நம்பிக்கையும் தான் மனிதனின் மன நோய்கள் தீர் வதற்கான மாமருந்துகள் ஆகும்.

[இந்தச் சமயத்தில் குமுதம் பால்யூ உள்ளே நுழைகிருர். 'அவள் பிரிவு' என்ற புத்தகத்தி லிருந்து வெளியிட்ட பகுதிகளைக் காண்பிக் கிருர். அப்போது சர்மா தமதுபழைய நினைவு களில் ஆழ்கிருர். தமது வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்களைச் சொல்கிருர். தாம் தொடர்பு கொண்டிருந்த மொழி வளர்த்த பெரியார், தேசீய வீறு கொண்ட மகான், கவித்திறத்தால் உணர்ச்சியூட்டிய பெருமான், தேச சேவைக்கே தம்மை அர்ப்பணித்துக்கொண்ட தியாகச் செம்மல் ஆகியோரைப் பற்றி விவரிக்கிருர். திரும்பவும் பேட்டி துவங்குகிறது]

பக்தியின் தத்துவம் பற்றி இன்றைய உலகிய லுக்கு ஏற்ப விளக்கம் தரலாமே!

மனிதன், தனக்காக மட்டும் வாழ்வதில்லை; மற்றவர்கள் நம்மையடைய வேண்டுமென்பதற் காகவும் வாழ்கிருன். அப்படி வாழ்வதிலே தன்னுடைய வாழ்க்கையையும் சேர்த்து நடத்து கிருன். ஒவ்வொருவனுக்கும் அவனவன் கடமை யென்பதுண்டு. இந்தக் கடமையென்பது இன்னுருக்குத்தான் என்பது இல்லை. ஏழை களுக்கும் பணக்காரர்களுக்கும் எல்லாருக்கும் கடமையென்ப தொன்றுதான்.

மனித சமூகத்திற்கும் அதன் மூலமாகக் கடவுளுக்கும் நாம் நமது கடமையை விடாமலும் ஒழுங்காகவும் செய்ய வேண்டுமானுல், கடவுள் நமக்குக் கொடுத்திருக்கிற எல்லாச் சக்திகளை யும் உபயோகத்திற்குக் கொண்டு வரவேண்டும். பரம கருணுநிதியான கடவுள் நமக்கு எல்லா

வற்றையும் கொடுத்திருக்கிருர். அவைகளை உபயோகப்படுத்துவதிலேதான் நம்முடைய உபயோகமும் இருக்கிறது.

கடமைக்கு எல்லே இல்லே; காலமும் இல்லே; இடமும் இல்லே. நமது வாழ்க்கைப் படிகள் ஒவ்வொன்றிலும் கடமையென்பது நம்மை அறைகூவி அழைக்கிறது.

கடமைக்காக நாம் வாழவேண்டும்; நம்பிக்கை கொள்ள வேண்டும்.

நம்மைச் சுற்றியுள்ள ஒரு சிலரையேனும் கொஞ்சம் உயரத் தூக்கி விடுவோமானல், அவர்களுடைய வாழ்க்கையில் ஒரு புனிதத் தன்மையைப் புகுத்தி வைப்போமானல் உண்மையிலேயே நாம் உபயோகமுள்ளவர்களாக வாழ்ந்தவர்களாவோம். பணத்தினல் உபகாரம் செய்கிறவன் பெரிய மனிதனுக மாட்டான். எவன் தன்னேயே பிறருக்கு ஒப்புக் கொடுத்து விடுகிருனே அவன்தான் பெரிய மனிதன். தன்னுடைய காலத்தை, தேக பலத்தை, ஆத்மாவைக் கொடுக்கிறவன் நேசிக்கப்படுகிருன்.

சிறிய விஷயத்தில் எப்படி இருக்கிரேமோ அப்படியே பெரிய விஷயங்களிலும் இருத்தல் வேண்டும். சிறிய விஷயந்தானே என்று நாம் நமது கடமையைப் புறக்கணித்து விட முடியாது. தனியாக இருந்தாலும் பலரோடு சேர்ந்து போனுலும், நமது மனச்சாட்சிப்படி நமது கடமையைச் செய்துதானுக வேண்டும். கடைசி வரை நமது லட்சியத்திலிருந்து நாம் சிறிதுகூடப் பிறழக்கூடாது. நன்மை உண்டானுலும் சரி, இல்லே யானுலும் சரி நமது கடமைதான் நமக்கு முக்கியம்.

ஒழுக்கம் என்பது என்ன? கடமையின் மற்ருெரு பகுதி தானே ! அன்பு கனிந்த செயல்கள், அவை எவ்வளவு சிறியனவேயானுலும், பெரியனவல்லவா? அவைகளுக்காக நாம் எவ்வளவு கஷ்டப்பட்டபோதிலும் அது பெரிதல்லவே. அது தான் கடமை; அது தான் ஒழுக்கம். அன்பு விளேத்தால் அன்பு விளேகிறது. கடமையைச் செய்தல் வேண்டும்.

(மீதி அடுத்த இதழில்)

# சமயபோதனே

பாடம் 18 — வினக்கள் — செப்டம்பர் 1975

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

வினக்கள் இந்த இதழ்க் கட்டுரைகள் பற்றியனவே ஆகும். விடைகளே முழு அளவு (Foolscape size) இரண்டு தனித் தாள்களில் நான்கு பக்கத்திற்குள் எழுதி இச்செயலகத்திற்கு, 5-10-1975க்குள் கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும். சந்தா எண், பெயர், வயது, முகவரி இவற்றைத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

1. கொற்றவை வழிபாட்டின் இலக்கியச் சான்றுகளேச் கூறுக.
2. "கடவுள் தங்குமிடம் கவிதையே!" என்பதற்குத் தவத்திரு அடிகளார் அவர்கள் கூறும் விளக்கம் யாது?
3. "பால் வடியும் பாடலின்" பொழிப்புரையைக் கூறுக.
4. "சிவன் உறைவதால் அவ்வாலயந்தானும் சிவகனுவே அமையும்"-விளக்குக.
5. பாச ஞானத்தின் தன்மை என்ன?
6. மண்ணகம் விண்ணகமாக எப்போது மாறும்?
7. "உடலின் வேருக உயிர் உண்டு" என்பதற்குச் சாங்கியர் காட்டும் காரணமென்ன?
8. மகாபாரதத்தைப் பற்றி அடிகளார் அவர்கள் கூறும் கருத்து என்ன?
9. யமுனேயின் பெருமை என்ன?
10. "புருடன்", "பிரகிருதி"-தெளிவுபடுத்துக.

உ

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி

## திருக்கோயில், பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர்!
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர்!
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர்!
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர்!

முடிக்காணிக்கை தரத் தனியிடம்!
தங்குவதற்கேற்ற வசதிகள்!
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல
இழுவை ரயில் வசதி!
பொங்கியெழும் பேரழகனைத் தாங்கிவரும் தங்கரதம்
காண வசதிகள்!

அத்தனையும் செய்து அழைக்கிறது பழனித் திருக்கோயில். தமிழ்க்கடவுளாம் கந்தப்பெருமானின் அருள்பெற்று, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் கண்காணிப்பில் கீழே கண்ட நிறுவனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. கார்த்திக்பள்ளி (ஆங்கிலப்போதனை)
6. செவிடர்பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்புஇல்லம் (அனாதை விடுதி)
10. முதியோர் இல்லம்
11. குழந்தைகள் காப்பகம்
12. மருத்துவமனை

பழனித் திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக 60 லட்சரூபாய் செலவில் மாபெரும் திருப்பணித் திட்டம் செயல்பட உள்ளது.

ஆர். அர்ச்சுனன், பி.ஏ.,
துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி